# திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

## (கரிவலம் வந்த நல்லூர்)





ர் மகாராஜா சரபோஜியின்

தி மகால் நூலகம்

மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 576

# திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

பதிப்பாசிரியர்

**மணி. மாறன்,** எம்.ஏ.,(த), எம்.ஏ.,(வ).,பி.எல்.ஐ.எஸ்.,

தமிழ்ப் பண்டிதர்,

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

மற்றும்

**ஆய்வு மையம்,**

தஞ்சாவூர்.

2016] [விலை: ரூ. 100-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி |
| பதிப்பாசிரியர் | : | மணி. மாறன், தமிழ்ப்பண்டிதர், |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 576 |
| ISBN | : | 978-93-85343-14-8 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2016 |
| தாள் | : | TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 146 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : | லேமினேசன் அட்டை |
| பொருள் | : | இலக்கியம் |
| விலை | : | ரூ. 100/- |

# வெளியீட்டாளர் முகவுரை

பல்வேறு மொழியில் அமைந்த நூல்கள், பனை ஓலைச்சுவடிகள், காகிதச்சுவடிகள் மற்றும் பழங்கால நிகழ்வுகள், வாழ்வியல் முறைகள், மருந்து, மருத்துவக் குறிப்புகள் கொண்ட ஓவியத் தொகுப்பினையும், இன்ன பிற வரலாற்று எச்சங்களையும் தன்னகத்தே கொண்டு திகழ்வதும், தஞ்சை மாநகருக்கு உலக அரங்கில் ஒரு தனிச்சிறப்பினைப் பெற்றுத் தரக்கூடியதும், கல்வி சார்ந்த நிறுவனமானதும் ஆகிய அறிவுக் கருவூலம் தஞ்சை சரசுவதி மகால் நூலகம் ஆகும்.

இந்நூலகத்தில் தமிழ் ஓலைச்சுவடிகள் துறையில் இலக்கணம், இலக்கியம், மருத்துவம், சோதிடம், மந்திரம் போன்ற துறைகளில் 7,700க்கும் மேற்பட்ட பனை ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப்பெற்று வருகின்றன. அத்தகு சுவடிகளில் இருந்து பல்வேறு தலைப்புக்களில், பல்வேறு பொருண்மைகளில் நூல்கள் பதிப்பிக்கப்பெற்று, நூலகத்தின் வழியாக அச்சாக்கம் பெற்று, ஆய்வாளர்கள், அறிஞர்கள், பொதுமக்கள் பயன்பெறும் வகையில் வெளியீடு செய்யப்பெற்று விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன.

அவ்வகையில் இந்நூலகத்தின் புதிய வெளியீடாக தமிழ் சிற்றிலக்கியங்களுள் ஒன்றான திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி எனும் நூல் வெளியிடப்பெறுகின்றது. சில நூல்கள் முன்னரே வேறு நிறுவனங்கள் பதிப்பித்து வெளியிட்டிருந்தாலும்கூட, நூலகத்தில் உள்ள சுவடிகளிலிருந்து அவை ஒப்பிட்டுப் பார்க்கப்பெற்று மீளவும் பதிப்பிக்கப்பெற்று வெளிவருகின்றது. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் இந்நூல் அதிவீரராம பாண்டியரால் இயற்றப்பெற்றதாகும். இவரின் காலம் கி. பி. 1564-1603 ஆகும். இவரே நைடதம் புலவர்க்கு ஔடதம் என்று சிறப்பித்துப் பேசப்பெறுகின்ற நைடதம் எனும் அருந்தமிழ் நூலைப் படைத்தவர்.

தமிழ் உலகில் குட்டித் திருவாசகம் என்று போற்றப்பெறும் சிறப்பிற்குரியது திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி. திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார் என்பது வாக்கு. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி நூறு செய்யுள்களால் அந்தாதி அமைப்பில் இயற்றப்பெற்றது ஆகும். இறைவனை அடையும் நோக்குடன், அவனிடம்

தன் பிறவியறுக்க வேண்டியும், முத்திப்பேறு அளித்திட வேண்டியும் பாடப்பெற்ற செய்யுட்களால் அமைந்தது இந்நூல்.

தாமிரபரணியாற்றின் நீர்வளத்தால் வளம்பொருந்திய திருநெல்வேலி மாவட்டத்தில், சங்கரநயினார் கோயில் வட்டத்தில் அமைந்துள்ள அழகிய சிற்றூரே கருவை, திருக்கருவை என்று அழைக்கப்பெறும் கரிவலம் வந்த நல்லூர் ஆகும். குலசேகரப்பாண்டியன் வேட்டையாடச் சென்றபோது அவன் வேட்டையிலிருந்து தப்பிய கரி (யானை)யானது ஒரு புதரைச்சுற்றி மறைந்ததாம். அங்கே சென்று பார்த்தபொழுது சிவலிங்கம் தோன்றியதாகவும் செய்திகள் கூறுகின்றன. எனவே கரிவலம் வந்த நல்லூரில் பால்வண்ணநாதர் என்ற பெயரில் சிவபெருமானும், உமையம்மை ஒப்பனையாள் என்ற பெயரிலும் காட்சி நல்கும் கோயில் எழுந்தது. இக்கோயிலில் களா மரத்தின் நிழலில் அமர்ந்து அருள் செய்கின்ற இறைவனைப் பற்றி எழுந்த பாடல்கள் கொண்டதே இந்நூலாகும். இந்நூலினைச் சிறப்பாகப் பதிப்பித்த நூலகத் தமிழ்ப்பண்டிதர் **மணி. மாறன்,** M. A.,(T) M. A.,(H) B.L.I.S,Dip.in Sanskrit,. அவர்களைப் பாராட்டுகின்றேன். இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திருமதி **அ. பூங்கோதை,** M. A., அவர்களுக்கும், நூலகர் முனைவர் **எஸ். சுதர்ஷன்,** M.A., B.Lit. M.L.I.S. Ph.D அவர்களுக்கும், சரசுவதி மகால் நூலக ஒளி அச்சுப்பிரிவினருக்கும் மற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அந்தாதி வடிவில் வரலாற்றுச் செய்தியை பதிவு செய்துள்ள இந்நூல் தமிழ் ஆய்வாளர்களுக்கும், மாணவர்களுக்கும், வாசகர்களுக்கும் பயன்மிக நல்கும்.

**ஆ. அண்ணாதுரை,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்.

தஞ்சாவூர்,
19-09-2016

# பதிப்பாசிரியர் உரை

மாபெரும் மனிதர்களான மகான்களும், ஞானிகளும் வேண்டுவது வீடுபேறு அடைதல் பற்றியே. முத்திநிலை வேண்டியே பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு இலக்கியங்கள் மலர்ந்துள்ளன. பிறவா யாக்கை பெருநிலை வேண்டும் என்பதே அவர்களின் குறிக்கோளாக அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. மாணிக்கவாசகப் பெருமான் உன்னை பாடுதல் அன்றி வேறு ஒன்றும் செய்திலர். அப்படியிருக்கையில், அவர் உன்னை ஏவ அவருக்காக நள்ளிரவில் பரவையார்பால் தூது சென்றாய். ஒரு புலவன் ஏவ தூது சென்றாய், அவரையும் கைக்கொண்டாய். ஆனால் யானோ உன்னை ஏவி பணி செய்யச் சொல்பவன் அல்ல, உனக்கு எல்லாவிதமான தொண்டினையும் செய்து வருகின்றேன். எனக்காக மனமிரங்க மாட்டாயா? என்று உள்ளம் உருகி பக்தி மேலிடப் பாடுகின்றார்.

இதனை,

> நாதனே கவிஞன் ஏவ
> ஒன்றுருட் போதிற் சென்ற
> தூதனே இமய வல்லி
> துணைவனே கருவை - யானே
> போதரே யத்தி னால்நின்
> பொலன்கழற் றொண்டு பூண்டும்
> ஏதும்நீ அகற்றி டாமல்
> இருப்பதும் இசைய தாமோ.

என அழகு தமிழில் அதிவீரராம பாண்டியர் பாடுகின்றார்.

தம்மை முன்னிறுத்தி வணங்கி வழிபட்டுச் செய்யும் ஒரு பெயரை எவ்வித இடையூறுகளும் இன்றி முடித்துத் தரவல்ல விநாயகப் பெருமானை வாழ்த்தும் காப்புச் செய்யுளில் தொடங்கி, நூறு பாடல்களில் கரிவலம் வந்த நல்லூரில், களாமரநிழலின் கீழ் எழுந்தருளியிருக்கும் பால்வண்ண நாதரான ஈசனைப் பாடிப் பரவுகின்றார் இந்நூலாசிரியர். பத்து+பத்து=நூறு என்பதால் பதிற்றுப் பத்தந்தாதி என வழங்கலாயிற்று.

திரு அடைமொழியாகக் கொண்டு திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி நூலின் பெயராயிற்று. முதல் பத்து, இரண்டாம் பத்து என்று வரிசையாக பத்து, பத்துக்களில் அந்தாதி அமைப்பில் அமையப் பாடப்பெற்றதே இந்நூலாகும்.

பக்தியை வெளிப்படுத்தும் விதமாக அமைத்து இந்நூலில், பல்வேறு புராண வரலாற்றுச் செய்திகள் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது. அவை இந்நூலிற்கு சிறப்பும், அழகும் சேர்க்கின்றன. விநாயகப் பெருமானுக்கு யானை முகம் வந்த வரலாறு, பிச்சாடணராக வரும் சிவபெருமான், தாருகாவனத்து முனிவர்கள், அவர்கள் மனைவியர் சிவன்பால் கொண்ட காதல், அதனால் கோபமடைந்த முனிவர்கள் ஏவிய புலி, பூதங்கள் என பல செய்திகள் சுவைபட கூறப்பெற்றுள்ளன.

அதேபோல வியாக்கிரபாத முனிவர் என்னும் புலிக்கால் முனிவர் கதையும், அடிமுடி காணா புராண வரலாற்று நிகழ்வும், குமரக்கடவுள் சூரபதுமனை வென்ற காட்சிகளும், மார்க்கண்டேயர் புராண வரலாற்றுச் செய்திகளும், சிவபெருமான் நஞ்சுண்ட செய்திகளும் சுவைபட கூறப்பெற்றுள்ளன.

அதிவீரராமபாண்டியன் மதுரை மாநகரை விட்டு அகன்று கொற்கை எனும் ஊரிலிருந்து ஆட்சி செய்ததாக இவர் இயற்றிய வெற்றி வேற்கை நூலின் தற்சிறப்புப் பாயிரத்தின் வழியாக அறியமுடிகின்றது. அதேவேளை வாழ்வியற் களஞ்சியம் எனும் நூலினை, தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. அதில் இவர் தென்காசியினைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்ததாக குறிப்பிட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நூலாசிரியர் அந்தாதி நூல்களாக திருக்கருவைப் பற்றி மேலும் இருநூல்களைப் படைத்துள்ளார். அவை கருவை வெண்பா அந்தாதி, கருவை கலித்துறை அந்தாதி என்பனவாகும்.

இளம்பருவத்தில் இவர் அதிக சிற்றின்பத்தில் ஈடுபட்டதின் விளைவாக தொழுநோய் ஏற்பட்டது. தான் செய்த தவறுகளை நினைத்து வருந்தி திருக்கருவை சிவபெருமான் மீது மேற்குறித்த அந்தாதிகள் மூன்றையும் பாடித் துதிக்க அப்பெருமானின் அருளால் இவரின் நோய் முற்றிலும்

நீங்கப் பெற்றதாகக் கூறுவர். "ஆறாக் காமக் கொடிய கனல் ஐவர் மூட்ட அவல மனம் நீறாய் வெந்து கிடப்பேனை" என வரும் இந்நூலின் இரண்டாவது செய்யுளும் இன்னோரன்ன பிற செய்யுள்கள் பலவும் மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்துவதாக உள்ளது.

இவருக்கு கல்வி கற்பித்த ஆசிரியர் சுவாமிநாத தேவர் என்பதும் தீக்கை செய்த ஆசிரியர் அகோர சிவாச்சாரியார் என்பதும், தாம் இயற்றிய வேறு நூல்கள் சிலவற்றில் இவர் பாடிய குரு வணக்கச் செய்யுள்களால் விளங்குகின்றன.

நம் முன்னோர்களுடைய வாழ்வியல் அனுபவங்களின் வெளிப்பாடே இலக்கியங்கள் எனலாம். பல்வேறு செய்திகள் அவற்றினுள்ளே புதைந்து கிடக்கின்றன. அள்ள அள்ளக் குறையாத கருத்து கருவூலமாய்த் திகழ்வது நம் தமிழ் இலக்கியங்களாகும். அவ்வகையில் சமயம் சார்ந்த நூலான திருக்கருவை பதிற்றுப்பத்தந்தாதி எனும், இந்நூலினைப் பதிப்பித்து வெளியிட அனுமதி வழங்கிய முன்னாள் மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் நூலக இயக்குநர் டாக்டர் என்.சுப்பையன்,இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல் முழுமைபெற்று வெளிவருவதற்கு பல்லாற்றானும் உதவிகள் புரிந்த மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் நூலக இயக்குநர் திரு. **ஆ. அண்ணாதுரை,**இ.ஆ.ப., அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நூல் வெளிவர ஊக்கமளித்து உதவி வரும் நிருவாக அலுவலர் திருமதி **அ. பூங்கோதை**, M. A., அவர்களுக்கும் என் நன்றி. நூலகர் முனைவர் **எஸ். சுதர்ஷன்** அவர்களுக்கும், அச்சிட்டு அளித்த அச்சகப்பிரிவு பணியாளர்களுக்கும், நூல் கட்டும் பிரிவினருக்கும், அட்டையினை வடிவமைப்பு செய்த பணியாளருக்கும், நூல் முழுமை பெற்று வெளிவருவதற்கு துணைநின்ற ஏனைய பணியாளர்களுக்கும், நிதி நல்கும் அரசுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மணி. மாறன்.
தமிழ்ப்பண்டிதர்

# சரசுவதி மகால் நூலக வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழ் எண்ணும் எழுத்தும் | 150-00 |
| தமிழ் ஆய்வுக் கடடுரைகள்-1 | 100-00 |
| தமிழ் ஆய்வுக் கட்டுரைகள்-2 | 150-00 |
| சரபேந்திர பூபால குறவஞ்சி | 100-00 |
| தமிழறி மடந்தை கதை | 80-00 |
| அறப்பளீசுர சதகம் | 150-00 |
| திருச்செந்தூர் பிளளைத்தமிழ் | 160-00 |
| தஞ்சாவூர் நாயக்கர் வரலாறு | 450-00 |
| பாபநாச க்ஷேத்திர மகாத்மியம் | 250-00 |
| கணபதி உபாசனை | 120-00 |
| தல வரலாற்று ஆய்வுக்கட்டுரைகள் | 180-00 |
| காலவிதான பத்ததி | 150-00 |
| காலப்பிரகாசிகை | 250-00 |
| பலதிரட்டு வைத்தியம் | 140-00 |
| அகத்தியர் ஆயுர்வேத சாத்திரம் | 400-00 |
| வைத்திய பலதிரட்டு | 200-00 |
| மகாமகம் - 2016 சிறப்பு மலர் | 250-00 |
| அருணாசல புராணம் | 150-00 |
| மதுரைவீரன் அம்மானை | 120-00 |
| கர்ப்பிணி பால ரோக சிகிச்சை | 300-00 |
| சரநூல் | 200-00 |
| சிற்ப ரத்தினம் | 500-00 |
| நட்சத்திர சிந்தாமணி பாகம்-1 | 310-00 |
| நடசத்திர சிந்தாமணி பாகம்-2 | 200-00 |
| நடசத்திர சிந்தாமணி பாகம்-3 | 250-00 |
| வராகர் ஓரா சாத்திரம் | 500-00 |
| அகத்தியர் லோக மாரணம் | 150-00 |
| நீதித்திரட்டு | 600-00 |
| காலவிதான பத்ததி | 150-00 |
| கார்த்தவீர்யார்ஜுன-உபாஸ-பத்ததி | 100-00 |
| நீதி நூல் | 100-00 |

# நூன்முகம்

திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி எனும் இந் நூலானது கருவை மாநகரில் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் சிவபெருமானைக் குறித்து அதிவீரராம பாண்டியர் பாடியது.

அந்தாதி என்பது அந்தத்தை ஆதியாக உடையது. முன் உள்ள பாட்டின் இறுதி எழுத்தாயினும் அசையா யினும் சீராயினும் அடியை ஒட்டி பின்வரும் பாட்டின் முதலாக வர, ஈறும் முதலும் மண்டலித்து முடியப்பாடும் ஒருவகைப் பண் பழங்காலத்துத் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் படி இந்நூல் 'விருந்து' எனும் வனப்பு அமைந்த தொடர்நிலைச் செய்யுளாகும். இது 'விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின்' என்ற செய்யுளியல் சூத்திரத்தாலும், 'விருந்தே தானும் பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டிய வாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரத் தொடுக்கப் படும் தொடர்நிலை மேலது' என்பது. அதற்குப் பேராசிரியர் கூறிய உரையாலும் பெறப்படும். பின்வரும் காலத்தில் வந்தவர்கள் இதனைச் சிறு காப்பியத்தில் அடக்குவர். பொருள் தொடர்பு நோக்காது. சொற் றொடர்பு ஒன்றே கொண்டு அமைந்துள்ளதால் சொற்றொடர் நிலைச் செய்யுளாய் அடங்கும். 'செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே' என்பது தண்டியலங்காரம். அந்தாதி வேற்றுமைத் தொகை புராண மாகும். அன்மொழித்தொகை, 'அந்+ஆதி' என பிரிக்க வடமொழித் தொடராதலால் 'அந்தாதி' என தீர்க்க சந்தியாகப் புணர்ந்தது.

ஒரேவகையான செய்யுளால் நூறு பாடல்கள் அந்தாதியாகத் தொடராகப் பாடுவதே பெரும்பாலும் அந்தாதி எனப்படும். இதனை நூற்றந்தாதி என்றும் கூறுவர். சந்த வேறுபாட்டால் பத்துவகையான செய்யுளால் நூறு பாடல்கள் அந்தாதியாகத் தொடர்ந்து அமைந்துள்ளது.

அதனால் 'பதிற்றுப்பத்தந்தாதி ' எனப் பட்டது. பதிற்றுப் பத்து என்பது 'பத்து+இற்று+பத்து' எனப் பிரியும். 'இற்று' சாரியை. பத்தாகிய பத்து என விரிதலால் பண்புத்தொகை நிலைத்தொடராகிப் பத்தினால் பெருக்கிய பத்து எனப் பொருள்படும். திருக்கருவைச் சிவபெருமானைக் குறித்த இந்த நூலின் ஆசிரியர் அதிவீரராம பாண்டியர் கலித்துறை அந்தாதி வெண்பா அந்தாதி என வேறு இரண்டு அந்தாதிகள் பாடியுள்ளதால் அவற்றிலிருந்தும் இதனை வேறுபடுத்து வதற்காக பதிற்றுப்பத்தந்தாதி என்றார் எனக் கொள்ளலாம்.

கருவை என்பது திருநெல்வேலி மாவட்டம், சங்கர நயினார் கோயில் வட்டத்தில் அமைந்துள்ளது. இவ்வூர் ஒரு சிவஸ்தலம், கரிவலம் வந்த நல்லூர் எனப்படும். குலசேகர பாண்டியன் வேட்டையாடச் சென்றபோது எதிர்பட்ட ஓர் யானையைத் துரத்த அது சிவாலயத்தை நாடி ஓடி, எம்பெருமான் இருந்த புதரை வலம் வந்து சிவகணமாகப் பெற்றமையால் இந்த ஊர் இப்பெயர் பெற்றது. தஞ்சாவூர் எப்படி தஞ்சை என மருவியதோ அதுபோல கரிவலம் வந்த நல்லூர் என்பது கருவை என மரூஉ ஆகி மேன்மையை உணர்த்தும் திரு எனும் அடைமொழிபெற்று திருக்கருவை என அழைக்கப் படுகிறது.

இவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமானின் திருநாமங்களாவன. பால்வண்ண நாதர், திருக்களா ஈசர், முகலிங்கர் ஆகியவை. ஸ்படிக லிங்கமாக இருப்பதால் பால்வண்ண நாதர் எனவும், களாமரம் தலவிருட்சமாகத் திகழ்வதால் திருக்களாவீசர் என்றும், திருமுகம் விளங்கித் தோன்றும் இலிங்க வடிவமாதலின் முகலிங்கர் எனவும் பெயர் பெற்றது. லிங்க வடிவமானது மூன்று வகைகளில் உள்ளது. அவைகள் அவ்வியக்த லிங்கம், வியக்த லிங்கம், வியக்தாவியக்த லிங்கம் என்பதாகும். பீடமும் லிங்கமுமாக இருப்பது அவ்வியக்தலிங்கம் என்றும், எல்லா அவயங்களும் வெளிப்படத் தோன்றும் மகேஸ்வர வடிவங்கள் யாவும் வியக்த லிங்கம் என்றும், முகமும் தோள்களும் வெளிப்படத் தோன்றும் இலிங்க வடிவம்

வியக்தா வியக்தலிங்கம் என்றும் அழைக்கப்படுகிறது. அம்மை பெயர் ஒப்பனை என்பதாகும்.

ஒப்பனை அம்மையுடன் வியக்தாவியக்த லிங்க வடிவமாகத் திருக்கருவை ஊரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைக் குறித்து பதிற்றுப்பத்தந்தாதி எனும் இந்நூலைப் பாடிய அதிவீரராம பாண்டியர் பாண்டிய வம்சத்து மன்னர்களில் ஒருவராவார். பல நூற்றாண்டு களுக்கு முன்னே செந்தமிழ் வளர்த்துச் சீரும் சிறப்பும் பெற்றிருந்த பாண்டியர் ஆட்சி இவருடைய ஆட்சி காலத்துக்கு பல ஆண்டுகளுக்கு முன்பே நிலை குலைந்துவிட்டபடியால் இவரும் இவரது முன்னோரும் தொல்லையாகிவிட்ட மதுரை மாநகரைவிட்டு கொற்கை எனும் ஊரிலிருந்து குறுநில மன்னராய் ஆட்சி செய்து வந்தனர். இது இந்த நூலாசிரியர் இயற்றிய வெற்றிவேற்கை அல்லது நறுந்தொகை எனும் நூலின் தற்சிறப்பு பாயிரம் மூலம் தெரியவருகிறது. அப்பாடல் பின் வருமாறு.

**வெற்றி வேற்கை வீர ராமன்**<br>
**கொற்கை யாளி குலசே கரன்சொல்**<br>
**நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்**<br>
**குற்றங் களைந்தோர் குறைவிலர் தாமே.**

இவரின் தமையனார் வரதுங்கராம பாண்டியர். உடன் பிறந்தார் இருவரும் தமிழ் மொழியில் சிறந்த புலமை உடையவர்களாய் விளங்கினார்கள். இவ்வந்தாதியும் இதை ஒத்த வேறிரண்டு அந்தாதிகளும் வரதுங்கராம பாண்டியர் இயற்றியதாகக் கூறுவோரும் உண்டு. ஆனால் அதிவீரராம பாண்டியர் இயற்றியவை இவை என்பதே பெரும் பாலோனோர் கூற்று. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருக்கருவை கலித்துறை அந்தாதி, திருக்கருவை வெண்பா அந்தாதி, நறுந்தொகை ஆகிய நான்கு சிறுநூல்களும் அது மட்டுமின்றி நைடதம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், காசிக் காண்டம் போன்ற நான்கு பெரும் நூல்களையும்

இவர் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்து தமிழில் பாடியுள்ளார். இதன் மூலம் இவருக்கு வடமொழிப் புலமையும் உள்ளது என்பது தெள்ளத்தெளிவாகும்.

இவர் இயற்றிய நூல்கள் மூலம் இவர் நுண்ணறிவும் நிறைந்த கல்வி அறிவும் உடையவரென்பதும் நன்கு விளங்குவது மட்டுமின்றி இவருக்கு 'எய்திய கவித்திறம் கையின் எய்திய தொன்றென்பதும்' விளங்கிக்கிடக்கிறது. ஆதலால் இவர் நுண்ணுணர்வு சிறப்பாக பெற்றவராகவும் விளங்குகிறார். இவர் முதன் முதலில் இயற்றிய நூல் நைடதம் எனவும் இறுதியில் இயற்றிய நூல் இத் திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி எனவும் கொள்ள அகச்சான்றுகள் உள்ளன.

இளம்பருவத்தில் இவர் அதிக சிற்றின்பத்தில் ஈடுபட்டதின் விளைவாக தொழுநோய் ஏற்பட்டது. தான் செய்த தவறுகளை நினைத்து வருந்தி திருக்கருவை சிவபெருமான் மீது மேற்குறித்த அந்தாதிகள் மூன்றையும் பாடித் துதிக்க அப்பெருமானின் அருளால் இவரின் நோய் முற்றிலும் நீங்கப் பெற்றதாகக் கூறுவர். 'ஆறாக் காமக் கொடிய கனல் ஐவர் மூட்ட அவல மனம் நீறாய் வெந்து கிடப்பேனை' என வரும் இந்நூல் இரண்டாவது செய்யுளும் இன்னோரன்ன பிற செய்யுள்கள் பலவும் மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்துவதாக உள்ளது.

இவருக்கு கல்வி கற்பித்த ஆசிரியர் சுவாமிநாத தேவர் என்பதும் தீக்கை செய்த ஆசிரியர் அகோர சிவாச்சாரியார் என்பதும், தாம் இயற்றிய வேறு நூல்கள் சிலவற்றில் இவர் பாடிய குரு வணக்கச் செய்யுள்களால் விளங்குகின்றன.

**திருக்கிளர்வெண் பிறைக்கொழுந்தும் செஞ்சடையும்**
**மறிமானும் திண்டோ ளெட்டும்**
**உருக்கிளர்வெம் புலியதளும் கரந்துமா**
**னிடவடிவின் உலகிற் போந்து**

V

**மருட்கிடனாம் எனைப் பிணித்த வல்வினையின்**
**தொடரனைத்தும் மாய நூறி**
**அருட்கடைக்க ணளித்தாண்ட சுவாமிதே**
**வன்திருத்தாள் அகத்துள் வைப்பாம்.**

இவர் இயற்றிய நூல்கள் ஒவ்வொன்றும் சொல் வளமும் பொருள் வளமும் நிரம்பித் தளும்பி நிற்கிறது. உருக்கத்திலும் பக்தியிலும் இப்பதிற்றுப்பத்தந்தாதியே தலைசிறந்து நிற்கிறது. நமது உள்ளத்தை உருக்கி உணர்வைக் கவர்வதில் ஒப்புயர்வற்ற உன்னத நூலென ஆன்றோர் அனைவரும் உவந்து கொண்டாடும் திருவாசகம் எனும் அரிய பெரிய அருள் நூலோடு இச்சிறுநூலை ஒப்பிட்டு இதனைக் குட்டித் திருவாசகம் என வழங்கப்படுவது ஒன்றே இதன் அருமையை நமக்கு உணர்த்தும்.



# திருக்கருவை எனப்படும் கரிவலம் வந்த நல்லூர்

திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரன் கோயிலி லிருந்து 10 கி.மீ. தொலைவில் வைப்பாற்றின் தென் கரையில் அமைந்த ஊர் கரிவலம் வந்த நல்லூர். இவ்வூரினை தமிழ் நூல்கள் கருவை என்று குறிப்பிடு கின்றன. இது குறித்து திரு அடையாகக் கொண்டு திருக்கருவை எனவும் வழங்கப்பெறுகின்றது.

இவ்வூர் பெயருக்கு புராணச் செய்தி கூறும் காரணம், குலசேகர பாண்டியன் வேட்டையாடிக் கொண்டிருந்த பொழுது, அவ்வேட்டையிலிருந்து தப்பி அஞ்சியோடிய யானை ஒன்று புதரைச் சுற்றி வந்து சிவகணமாக மாறியது. அந்தப் புதரில் சிவலிங்கம் இருப்பதைக் கண்ட மன்னன், அதனை வணங்கியமை யால் இவ்வூரினுக்கு கரிவலம் வந்த நல்லூர் (கரி-யானை) என்று பெயர் வழங்கலாயிற்று என்கின்றது.

இவ்வூரினைச் சுற்றிலும் கருவேல மரங்கள் நிறைந் துள்ளன. அதனால் கருவை நல்லூர், கருவேல நல்லூர் என்று பெயர் வழங்கிப் பின்னர் கரிவலம் வந்த நல்லூர் எனத் திரிந்தது என்றும் கூறுவர். இது இயற்கையை ஒட்டி எழுந்த பெயர்க்காரணம் ஆகும்.

அதிவீரராம பாண்டியனின் அண்ணன் வரதுங்கராம பாண்டியன் கரிவலம் வந்த நல்லூரில் இருந்து தென் பாண்டி நாட்டின் சில பகுதிகளை ஆட்சிசெய்தார். இவ்வூரில் வெற்றிலைக் கொடிக்கால் மிகுதியாகவே உண்டு. பருத்தி அரைக்கும் ஆலைகளும் உள்ளன.

சிறப்பு வாய்ந்த இந்த திருக்கருவையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவன் பால்வண்ண நாதர் என்றும், இறைவி ஒப்பனை அம்மை என்றும் அழைக்கப்படுகின்றனர். இவ்வூர் குறித்து ச. திருமலை வேற்கவிராயர் என்பவர் பாடிய திருக்கருவைத் தலபுராணம் எனும் நூல் ஒன்று உள்ளது.

அதோடன்றி இந்நூலினை யாத்த அதிவீரராம பாண்டியர் திருக் கருவைக் கலித்துறையந்தாதி, திருக்கருவை வெண்பா வந்தாதி என்ற நூல்களையும் படைத்துள்ளார். இவரின் திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் இந்நூல் குட்டித் திருவாசகம் என்று போற்றப்படும் புகழ் பெற்றதாகும்.

இவ்வூரின் வைப்பாற்றங் கரையில் மகாத்மா காந்தியடிகளின் ஈமச் சாம்பல் கரைக்கப்பெற்றது. அதன் நினைவாக ஒவ்வோராண்டும் பிப்ரவரி மாதம் 12ஆம் நாள் சர்வோதயக் குழுவினரால் விழா எடுத்துக் கொண்டாடப்பெற்று வருகின்றது.



# நூலாசிரியர்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சங்கரநயினார் கோவில் வட்டத்தில் அமைந்துள்ள திருக்கருவை எனப்படும் கரிவலம் வந்த நல்லூரில் திகழும் பால்வண்ண நாதர் பேரில் எழுந்ததே திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி எனும் நூலாகும். குட்டித் திருவாசகம் எனப் போற்றப் படும் இந்நூலை யாத்தவர் அதிவீரராம பாண்டியர் ஆவார்.

விஜயநகர மன்னர்கள் காலத்தில் வாழ்ந்துவந்த பாண்டிய மரபு மன்னர் பரம்பரையைச் சேர்ந்தவர் அதிவீரராம பாண்டியர். கி. பி. 1564-1603 ஆகிய ஆண்டுகளில் தென்காசியை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவர். இவர் நாட்டுக் காவலராக மட்டுமின்றி ஏட்டுப் பாவலராகவும் சிறந்து விளங்கினார். சில வரலாற்று அறிஞர்கள் இவர் திருநெல்வேலி பெருமாள் புதல்வர் என்று கூறுவர். இருப்பினும் இவர் திருநெல்வேலி பெருமானின் ஏற்பு மகனும், வரதுங்க ராம பாண்டியரின் இளவலுமாவார். பராக்கிரம பாண்டியரின் மூன்றாம் புதல்வருமாவார் என்று ஆய்வாளர்கள் முடிவு செய்து தெளிவுபடுத்தியுள்ளனர். இவரின் இயற்பெயர் அதிவீர ராமன், சடையவர்மன் எனப் பட்டப்பெயரும் இவருக்கு உண்டு. தமிழ்ப்புலமையும், வடமொழிப்புலமையும் ஒருங்கமையப்பெற்றவர். இவர் படைத்த நூல் நைடதம் எனும் பெருநூலாகும். நைடதம் புலவர்க்கு ஒளடதம் என்று தமிழ் உலகில் போற்றப்படும் சிறப்பிற்குரிய ஒரு நூலாகும். ஹர்ஷர் வடமொழியில் எழுதிய நூலினையும், அதையொட்டி தமிழில் புகழேந்தி புலவர் எழுதிய நளவெண்பாவினையும் , கைக்கொண்டு அதிவீரராம பாண்டியரால் எழுதப்பட்டதே நைடதம் எனும் நூலாகும். இந்நூல் இருபத்தெட்டு படலங்களுடன் 1173 விருத்தச் செய்யுள்களால் அமையப் பெற்றுள்ளது. இந்நூலினை வேட்டை நாயின் நடைபோல் இருக்கிறது என்றும் நூலின் சுவை கரும்பினை அடியிலிருந்து தொடங்கி

நுனிவரை உண்பது போல் போகப் போக சுவை குறைகிறது என்றும் இவரது அண்ணியாரால் குறை கூறப்பட்டது என்று கூறுவர்.

இக்குறையைப் போக்கவே இவரால் காசிக் காண்டம் இயற்றப்பட்டது. இந்நூல் காசிநகரின் பெருமையைப் பறை சாற்றும் நூலாகும். வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட இந்நூலானது பூர்வகாண்டம், உத்தர காண்டம் எனும் இருபிரிவாய் 100 அத்தியாயங்களுடனும், 2526 விருத்தங்களால் பாடப்பெற்றுள்ளது. இவர் கூர்ம புராணம் எனும் நூலினையும் படைத்துள்ளார். வடமொழியில் உள்ள பதினென் புராணங்களுள் ஒன்றான கூர்மபுராணத்தினை 97 அத்தியாயங்களில் 3817 விருத்தங்களில் அமைத்து இயற்றியுள்ளார். சிவபூஜை மரபுகள் பற்றியும் சைவ, வைணவ தெய்வங்கள் பற்றியும் விளக்குவது இந்நூலாகும்.

வெற்றிவேற்கை எனும் நூல் எளிய தமிழில் படைக்கப்பட்ட அறநூலாகும். ‘எழுத்தறிவித்தவன் இறைவன்’, ‘பெரியோரெல்லாம் பெரியரும் அல்லர்’ “பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால் மெய் போலும்மே மெய்போலும்மே” என்ற மரபு மீறிய சிந்தனைகளை அடியொற்றி 82 அறமொழிகளை எளிய இனிய நடையில் அமைத்துள்ளார்.

அந்தாதி நூல்களாக கருவை வெண்பா அந்தாதி, கருவை கலித்துறை அந்தாதி, கருவை பதிற்றுப்பத்தந்தாதி ஆகிய நூல்கள் கரிவலம் வந்த நல்லூர் இறைவனைத் தலைவராகக் கொண்டு பாடியுள்ள நூல்களாகும். எளிமையான பாடல்களைக் கொண்ட இந்நூல்கள் சிவநெறியைப் போற்றி புகழத்தக்க வகையில் அதிவீரராம பாண்டியரால் படைக்கப்பெற்றுள்ளது.



# அந்தாதி

அந்தாதி இலக்கியம் என்பது 96 வகையான பிரபந்தங்கள் என்று தமிழ் மொழியில் தொகைப்படுத்தி கூறப்படும் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகும். அந்தாதி எனும் சொல் அந்தம்-ஆதி என்று பிரியும். அந்தம்-முடிவு என்றும் ஆதி தொடக்கம் என்றும் பொருள்படும். அதனால் ஒன்றின் முடிவு மற்றொன்றின் தொடக்கமாக அமைவது என்பது இதன் பொருளாகும்.

அந்தாதி, அந்தாதித்தொடை என்றும் செய்யுள் அந்தாதி என்றும் பாகுபடும். ஒரு செய்யுளின் இரண்டடிக்கு இடையே அமைந்துள்ள அந்தாதி அமைப்பு, அந்தாதித் தொடை என்றும், ஒரு செய்யுளின் இறுதி அடுத்த செய்யுளின் தொடக்கமாக அமைவது செய்யுளந்தாதி எனப்படும். செய்யுளந்தாதியில் ஒரு செய்யுளின் முடிவிலுள்ள எழுத்தோ, அசையோ, சீரோ, சொல்லோ, அடியோ அடுத்த செய்யுளின் தொடக்கமாக அமையும். இதில் எது அமைகிறதோஅதன் பெயரால் அந்த அந்தாதி பெயர் பெறும். எடுத்துக்காட்டாக ஒரு பாடலின் இறுதி சொல் அடுத்த பாடலின் தொடக்கத்தில் அமைகிறபோது அந்த சொல்லமைப்பு சொல்லந்தாதி எனப்படும்.

அக்காலத்தில் எழுதுவதைக் காட்டிலும் மனனம் செய்து படிப்பதை பெரிதும் விரும்பினர். எழுதுபொருள், எழுதப்படு பொருள், எழுது கருவிகள் பழங்காலத்தில் கிடைப்பது அரிதாக இருந்தது. விரிவாக எழுதப்படும் செய்திகள் திட்பமும் நுட்பமும் பொருந்த செய்யுளாக அமைக்கப்பட்டன. இதனை மனதில் எளிதில் கொள்வதற்கு ஏற்ப அதன் உறுப்புகளாகிய எதுகை,

மோனை, முரண் முதலிய தொடைகளும், அவற்றின் வகைகளும் பிறவும் உதவின. இதனை தொடர்ந்து நினைவில் கொள்ள அந்தாதிப் பாடல்கள் உதவியாக அமைந்துள்ளது.

பிற்காலத்தில் நூல்கள் அந்தாதி யாப்பமைப்பில் தான் தோன்றியது என்றாலும் சங்க இலக்கியங்களில் அந்தாதி அமைப்பிற்கான கருத்துக்கள் அமைந்து காணப்படுகின்றன. பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தும், ஐங்குறு நூற்றில் சிலவும் அந்தாதி யாப்பு முறையில் அமைந்துள்ளன. மேலும் தொகை நூற் செய்யுள்கள் சிலவற்றின் சில அடிகளில் அந்தாதி அமைப்பினைக் காணமுடிகிறது. அதுபோலவே சிலப்பதிகாரத்திலும் கானல்வரிப் பாடலில் அந்தாதி அமைப்பு முறை சில இடங்களில் அமைந்துள்ளதைக் காணலாம்.

பல சிற்றிலக்கிய வகைகளைத் தோற்றுவித்தவர்கள் பக்திக் கவிஞர்கள் ஆவர். அதற்கு பக்திப் பொருண்மை காரணமாகும். அவ்வகையில் அந்தாதி இலக்கியத்தை முதலில் தோற்றுவித்தவர் காரைக்கால் அம்மையார் ஆவார். அவர் இயற்றியுள்ள அற்புதத் திருவந்தாதி இதுவரை தமிழில் கிடைத்துள்ள அந்தாதிகளுள் முதலாவதாக விளங்குகிறது. அதுபோலவே ஆழ்வார் களின் பக்திப் பாடல்களிலும், நாயன்மார்களின் பதிகங் களிலும் அந்தாதி அமைப்பு ஆங்காங்கே பயின்று வந்துள்ளது.

பதினோராம் திருமுறையிலுள்ள பல நூல்கள் அந்தாதி இலக்கிய வகையில் அமைந்துள்ளதால் அத்திரு முறையானது ‘அந்தாதி மாலை’ என்றும் சொல்லப் படுகிறது. திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், கோயில் மூத்த திருப்பதிகம் கோயில்

திருப்பதிகம், பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து, யாத்திரை பத்து ஆகியன அந்தாதி முறையில் அமைந் துள்ளன. நாலாயிர திவ்விய பிரபந்தத்துள் முதலாழ் வார்களின் அருளிச் செயல்கள், திருவாய்மொழி முதலிய பல பிரபந்தங்கள் அந்தாதி யாப்பில் அமைந்துள்ளன. திருமந்திரத்தில் பல பகுதிகளை அந்தாதி அமைப்பில் திருமூலர் படைத்துள்ளார். திருஞான சம்பந்தர், 'பிரமபுரத்துறை' என்று தொடங்கும் பதிகத்தை இயமக அந்தாதி வகையில் பாடியுள்ளார்.

அந்தாதித் தொடையின் நடையும், ஓசையும் மக்களின் உள்ளத்தைக் கொள்பனவாக இருந்தன. உள்ளத்திலும் பதிந்தது. ஆகவே அந்தாதித் தொடை அமைந்த நூல்களைப் புலவர்கள் படைத்தனர். கி. பி. 6, 7ஆம் நூற்றாண்டுகளில் இவ்வகை இலக்கியங்கள் அதிகமாக தோன்றின. இந்நூல்கள் தொடக்கத்தில் எளிமையும் இனிமையும் அமைய பாடப்பெற்றன.

இலக்கிய வகைகளுக்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்கள், ஒலியந்தாதி, பதிற்றந்தாதி, நூற்றந் தந்தாதி, கலியந்தாதி என நான்காகப் பிரித்துக்கொண்டு இலக்கணம் தந்துள்ளன. மேலும் இயமக அந்தாதி, திரிபு அந்தாதி, நீரோட்ட யமக அந்தாதி, சிலேடையந்தாதி போன்றவையும் அந்தாதி இலக்கிய வகைகளாக அமைந்து உள்ளன.

ஒலியின் அடிப்படையில் பெயர் பெற்றது ஒலியலந்தாதி இதன் ஒவ்வொரு அடியிலும் பதினாறு கலை வைப்புகள் அமையவேண்டும். நான்கு அடிகளிலும் அறுபத்து நான்கு கலை வைப்புகள் அமைய அந்தாதி யாப்பில் பாடப்படும். வெண்பா, கலித்துறை, அகவல் போன்றவைகள் இதில் யாப்பாக அமைகின்றது.

பதிற்றந்தாதி என்பது பத்துப் பாடல்களைக் கொண்டது என்று பொருள்படும். வெண்பா அல்லது கலித்துறை இதன் யாப்பாக அமைகிறது. நூறு பாடல்களைக் கொண்ட அந்தாதி நூற்றந்தாதி எனப்படும். நூறு வெண்பாக்கள் அல்லது நூறு கலித்துறைப் பாக்கள் இவ்வகை அந்தாதிகளில் இடம் பெறும். வெண்பா நூறு கொண்டது. வெண்பா அந்தாதி என்றும் கலித்துறைப் பாடல்கள் நூறு கொண்டது கலித்துறை அந்தாதி என்றும் பெயர் பெறும். ஒவ்வொரு பத்துப்பாடலும் தனித்தனிச் சந்தங்களில் அமைக்கவும் படும். இவ்வாறு அமையும் அந்தாதி பதிற்றுப்பத்து அந்தாதி எனப்பெயர் பெறும் குட்டித் திருவாசகம் என்னும் திருக்கருவை பதிற்றுப்பத்து அந்தாதி இவ்வாறு அமைந்ததாகும். திருவாசகத்திலுள்ள திருச்சதகம் இவ்வாறு அமைந்துள்ள போதிலும் திருச்சதகம் என்றே பெயர் பெற்றது. நமக்கு கிடைத்துள்ள அந்தாதிகளுள் இவ்வகை அந்தாதிகள் அதிக எண்ணிக்கையில் கிடைத்துள்ளன. இதனையடுத்து கலித்துறை அந்தாதி காணப்படுகிறது.

ஒலியந்தாதி போன்று கலியந்தாதியிலும் கலை வைப்பு இடம்பெறுகிறது. ஒலியந்தாதியில் அறுபத்து நான்கு கலை வைப்பு அமைய, கலியந்தாதியில் அக்கலை வைப்பு முப்பத்திரண்டாகக் குறைகிறது.

இயமக அந்தாதி என்பது சொல்லணியால் பெயர் பெற்றது. பாட்டின் நான்கு வரிகளிலும் முதற்சீரில் வந்த எழுத்துக்களே திரும்ப வரும். ஆனால் அவற்றைப் பிரித்துப் பொருள் பார்க்கும்போது நான்கு வேறு பொருள்களைத் தரும். இத்தகைய மடக்கை வடமொழியாளர் இயமகம் என்றுரைப்பர். இத்தகைய பாடல்களை இயமக அந்தாதி என்பர். இது ஐந்தெழுத்திற்கு மேற்பட அமைவது

சிறப்பாகவும் அதற்கு குறைவது சிறப்பற்றதாகவும் கருதப்படுகிறது.

திரிபந்தாதி என்பது சொல்லணி வகையில் பெயர் பெற்றதாகும். ஒரு செய்யுளின் நான்கடிகளிலும் உள்ள முதல் எழுத்துக்கள் மட்டும் மாறுபட்டுத் திரிந்து அமையும். ஏனைய எழுத்துக்கள் பலவும் ஒத்துவர பொருள் வேறுபட்டு அமையும். இத்திரிபு அந்தாதியும் ஐந்து எழுத்திற்கு குறைவாக இருந்தால் சிறப்பற்றதாக கருதப்படும். இவற்றைப் படைப்பது எளிதன்று இதற்கு சொற் பயிற்சியும் மிகுந்த புலமையும் தேவைப்படும். நீரோட்டக யமக அந்தாதி என்பது இதழ்கள் ஒன்றோடொன்று ஒட்டாத எழுத்துக்களை அமைத்து அந்தாதி முறையில் பாடப்படுவது ஆகும். ப, ம இரண்டும் இதழொலிகள் எனவே இவ்வகை அந்தாதியில் இவ்விரு எழுத்துக்கள் இடம்பெறாத சொற்கள் பயின்று வரும். இதழ்கள் ஒன்றோடொன்று ஒட்டாமல் அகல்வதால் இதனை இதழகல் அந்தாதி என்றும் கூறுவர். வரையறை நூறு பாடல்கள் ஆகும்.

சிலேடை வெண்பா, சிலேடை வெண்பாமாலை, சிலேடை உலா, சிலேடைப் பதிகம் போன்ற சிற்றிலக்கிய வகைகள் பலவும் சிலேடை முறையில் அமைக்கப் பட்டுள்ளமை போன்று சிலேடை வகையில் அமைந்த செய்யுள்களாலாகிய அந்தாதி, சிலேடை அந்தாதி எனப்படும். இது ஒன்றிற்கு மேற்பட்ட பொருள் தருமாறு அமைந்த பாடல்களைக் கொண்டதாகும்.

மேலும் சில அந்தாதிகளாக உயிரெழுத்து அந்தாதி, ஓரெழுத்து அந்தாதி, ஓரெழுத்து இயமக அந்தாதி, பஞ்சாட்சர அந்தாதி, ஆறெழுத்து அந்தாதி, கொம்பிலா வெண்பா அந்தாதி, ஒலியல் அந்தாதி, முதலொலியல்

அந்தாதி, நடுவொலியல் அந்தாதி, சந்த கலித்துறை அந்தாதி, கலிவிருத்த அந்தாதி, இயமகக் கலித்துறை அந்தாதி, ஒரு தொடை செய்யுள் நீரோட்டக அந்தாதி, நீரோட்டகத் தலைச் செய்யுள் அந்தாதி, தலையணிச் சீரிதழகல் அந்தாதி, இருசொல் இயமக அந்தாதி, நூற்றெட்டு வெண்பா அந்தாதி, சதகத்து அந்தாதி, பல்சந்த அந்தாதி, திரிபு வெண்பா அந்தாதி போன்றவையாகும்.

அந்தாதித் துறையில் நூல்கள் பெருகப் பெருக அருஞ்சொற்களும், கடின சொற் புணர்ச்சிகளும் பாடல்களில் இடம்பெறலாயின. அந்தாதி நூல், இரட்டுற மொழிதல், மூன்றுற மொழிதல், நான்குற மொழிதல், ஐந்துற மொழிதல், ஆறுற மொழிதல் எனப் பலவகையில் விரிந்தது. இது சுவைப்போருக்கு பல இன்னல்களைத் தந்தது. திரிபு, மடக்கு போன்றவை இப்பாடல்களில் மிகுதியாக அமைந்து இவற்றைப் படைக்கிற புலவரை சோதனை செய்யும் கருவிகளாய் அமைந்துவிட்டன. இயல்பாக நுகரும் கவியின்பம் தடைபட்டு உணர்வு குன்றியது. ஆற்றொழுக்கு நடையின்றி, கரடு முரடான சந்திகள் வந்து படிப்போரை மேலும் படிக்கவொட்டாது தடுத்தன.

அந்தாதி இலக்கியம் தொடக்கக் காலத்தில் வெண்பாவை யாப்பாக கொண்டமைந்தது. முதல் அந்தாதியான காரைக்கால் அம்மையாரின் அற்புத திருவந்தாதி வெண்பா யாப்பில் அமைந்துள்ளது. அடுத்து எழுதிய ஆழ்வார்களும் வெண்பாவையே பயன்படுத்தி யுள்ளனர். அந்தாதி இலக்கியங்களேயல்லாமல் இரட்டை மணிமாலை, மும்மணி மாலை, நான்மணிமாலை, நவமணி மாலை, அட்டமங்கலம், ஒருபா ஒருபஃது முதலான வேறு பல சிற்றிலக்கிய வகைகளும் அந்தாதி

யாப்பில் அமைந்துள்ளன. இவற்றை அந்தாதி பெயரால் குறிப்பிடவில்லை. இறைவன் பெயர், திருத்தலத்தின் பெயர், அடியார்களின் பெயர், பாவகை, செய்யுள் எண். இயல்பு போன்றவற்றின் அடிப்படையில் அழகர் அந்தாதி, அருணை அந்தாதி, திருத்தொண்டர் திருவந்தாதி, வெண்பா அந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, சிவபூசை அந்தாதி என்பன போன்ற பலவகையாக.பெயர் பெறுகின்றன. இவை பிற்காலத்தில் தோன்றி வளர்ந்து இருந்தாலும் இதுவரை ஏறக்குறைய ஆயிரம் வரையிலான அந்தாதிப் பெயர்களால் இந்த இலக்கிய வகைகள் மக்களிடையே செல்வாக்கைப் பெற்றுள்ளன என்பதை நம்மால் உணர முடிகிறது.



# நூல் காட்டும் புராண வரலாறு

திருக்கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதி எனும் இந்நூலில் பல்வேறு இடங்களில் புராண வரலாற்று செய்திகள் குறுகியும் விரிந்தும் காணப்படுகின்றது. அவ்வகையில் காப்புச் செய்யுளில் இருந்து வருகின்ற புராண செய்திகளைப் பார்ப்போம்.

விநாயகப் பெருமானுக்கு யானை முகம் வந்த வரலாறு:- கயமுகாசுரன் தேவர்களாலும், பூதங்களாலும் மனிதர்களாலும், மிருகங்களாலும், ஆயுதங்களாலும் இறவாதிருக்க சிவபெருமானிடத்தில் வரம் கேட்டிருந் தான். பெற்ற அவ்வரத்தால் பெரிதும் அகந்தை கொண்ட அவன் தேவர்களை மிகவும் துன்புறுத்துதல் செய்தான். அதனைப் பொறுக்கமாட்டாத தேவர்கள் சிவபெரு மானைச் சரணடைந்து தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களை எல்லாம் சொல்லி முறையிட்டனர். அடைந்தாரைக் காத்தருளும் அருள்பெரும் தகையாள ராகிய சிவபெருமான் தேவர்களுக்கு ஆறுதல் கூறி அவர்களை அனுப்பி வைத்துவிட்டு, பார்வதி தேவியாருடன் கயிலை மலைச்சாரலில் அமைந்த அணிமலர் சோலையகத்து திகழும் திருமணி மண்டபத்திற்கு எழுந்தருளினார்.

அங்குள்ள சித்திரச்சுவரில் வரையப்பட்டிருந்த ஓவியங்களை அண்ணலும், தேவியும் பார்த்துக் கொண்டே செல்லும்போது பிரணவ மந்திரம் ஒரு ஓவியமாய் வரையப்பட்டிருப்பதைக் கண்டனர். அதைக் கண்ட சிவபெருமான் யானை முக வடிவில் அமைந்த அவ்வோங்காரத்தை .கயமுகாசுரனைக் கொன்று தேவர்களைக் காத்தருளும் திருக்குறிப்புடன் நோக்குவார்

ஆயினர். அந்தளவிலே அவ்வோங்காரம் களிறும் பிடியுமாய் பிரிந்து கூட அக்கூட்டத்தின் விளைவாக விநாயகப்பெருமான் யானை முகத்துடன் தோன்றி கணங்களுக்குத் தலைமை தாங்கி கணபதியாய் கயிலாயத்தில் அமர்ந்து தேவர்களின் குறை தீர்க்க அருள்செய்து கயமுகாசுரனுடன் போர் புரிந்தார். ஆயுதங்களால் அவனைக் கொல்லமுடியாது என்பதை உணர்ந்து தன்னுடைய திருமுகத் திருக்கோட்டில் வலக்கோட்டை ஒடித்து வீசி அதன் மூலம் கயமுகாசுரனைக் கொன்றார்.

சிந்துரன் எனும் அசுரனை அழிக்கும் பொருட்டு கருவுரு கொண்டிருக்கையில் அந்த அசுரனால் தலை கொய்யப்பட்டு ஆவணி மாத சதுர்த்தியில் சிரமம் ஏதுமின்றி திருஅவதாரம் செய்து பின்னர் கயாசுரன் சிரத்தைக் கொண்டு திருவுரு முற்று பெற்றதாக விநாயகர் புராணத்தில் கசானனர் திருஅவதாரப்படலம் கூறுகின்றது. வேறு பிற புராணங்கள் பலவாறாகக் கூறுவதுமுண்டு. பிரணவ சொரூபம் விளக்க வந்த திருவுருவம் என்று கூறுதலும் பொருந்தும்.

'சீறுடரவம் முடித்த சடை' என்ற சொல்லால் கிடைக்கக் கூடிய புராண வரலாறு ஆவது தாருகாவனத்து முனிவர்கள் சிவபெருமானை மணந்து மீமாம்ச நூல் கூறும் கருத்தை உண்மை என நம்பி இறுமாந்திருந்தனர். அவர்கள் இறுமாப்பை அடக்குவதற்காக உள்ள நிலைமையை சோதித்து தன் திருவடிக்கு ஆட்படுத்த திருவுளம் கொண்ட சிவபெருமான்.

**திருவடியின் மிதியடியும், திகமுடைவெண் கோவணமேல்**
**மருவரையும், புரிநூலும், வலஞ்சுழிஉந் தியும் மார்பும்**
**ஒருவரையும், இருவரையும் புரையாத உயர்தோளும்**

பரவருநற் பொக்கணமும், தமருகமும், பலிக்கலனும்
சீராரும் திருமிடறும், செங்கனிவாய்ப் புன்சிரிப்பும்
ஏராறும் வார்காதும், இலகுவிழித் தொழில் நயப்பும்,
வேராரும் திருநுதற்கீழ் விருப்புருவத் திருப்புருவம்
தாராநிற் கும்கமலத் தனிமலர்போல் திருமுகமும்,
பொட்டுமலி திருநுதலும், புரிந்துமுரிந் திசைந்தசைந்த
மட்டுமலி கருங்குழலும், வளர்பவள ஒளிமழுங்க
விட்டுவிளங் கியஎழிலார் மேனியுமாய் மெல்லியலார்
பட்டுவிழும் படியில்விழும் படியழகின் படிவமென

(கோயிற்புராணம்)

பிட்சாடனர் திருக்கோலம் கொண்டு திருமாலை புகல்வரிதாம் பொலிவினதாய், அற்புதமாய்ச் சிவந்து நிமிர்ந்தகன்றவாயில் விழிக் கணைகள் விற்புருவத்துடன் கூடிய மோகினி உருவம் கொள்ளச் செய்து மோகினி வடிவுடன் இருந்த திருமாலும் தானும் சேர்ந்து தாருகா வனத்து முனிவர்கள் வசித்த பர்ணசாலை சென்று பிச்சை இரந்தனர். அப்போது அம்முனிவர்கள் மோகினியின் பேரழகில் மயங்கியும் அதுபோல முனிவர்தம் மனைவியர் சிவபெருமானின் பேரழகில் மயங்கியும் தம் நிறையும் கற்பும் இழந்து உள்ளம் நிலைக்குலைந்தனர். இந்நிகழ்வால் முனிவர்தம் மனைவியர்கள் கற்பிழக்கக் காரணமான காபாலி மீது கோபம் கொண்டு முனிவர்கள் அவரை பலவாறு சபித்தனர். அச்சாபங்கள் எல்லாம் இறைவனை அணுக முடியாமல் கெட்டொழிந்தன.

அதனைக் கண்ட முனிவர்கள் உண்மைநிலை உணராது முன்னைவிட அதிக கோபம் கொண்டு காபாலியை தம் யக்ஞ பலத்தால் அழிப்போம் என வெகுண்டு சிவபெருமான் திருமுன்னர் ஓமகுண்டம் அமைத்து நஞ்சான திரவியங்கள் பலகொண்டு

நெஞ்சாலும் நினைவறிய நிர்மலனே இலக்காக அபிச்சார வேள்வி ஒன்று செய்தனர். உடனே அந்த ஓமகுண்டத்திலிருந்து கர்ஜனையுடன் புலி ஒன்று எழுந்தது. அப் புலியினை முனிவர்கள் சிவபெருமான் மீது ஏவினர். சிவபெருமான் சிரித்து அருளி தம்மை தாக்க வந்த அப்புலியைப் பிடித்து தம் திருக்கரத்தின் நுனி நகத்தால் அதன் தோலை கிழித்து பசும்பட்டாக இடுப்பில் உடுத்தி அருளினார். அதன்மேல் ஓமகுண்டத்திலிருந்து பூதங்கள் எழுந்தன. முனிவர்கள் அவற்றினை ஏவ அவை சிவபெருமானுக்கு அடிமைகளாகி அவரைச் சூழ்ந்து வணங்கி நின்றன. பின்னர் மானும், மழுவும், நாகங்களும் ஓம குண்டத்திலிருந்து எழுந்தன. முனிவர்கள் ஏவலால் வந்த அவைகளில் மானை இடக்கையிலும், மழுவை வலக்கையிலும், நாகங்களை சிரத்திலும், உரத்திலும், கரத்திலும் ஆபரணங்களாக அணிந்து அருளினார் சிவபெருமான்.

பின்னர் முயலகன் எனும் அசுரன் குள்ள வடிவத்தில் ஓம குண்டத்தில் இருந்து தோன்றி வந்தான். சிவபெருமான் அந்த முயலகனை கீழே தள்ளி முதுகு நெறிய தன் வலத்திருவடியால் மிதித்து ஏறி நின்றார். முனிவர்கள் ஏவிய எதனாலும் பயன் ஏற்படாதது கண்டு மந்திரங்களை ஏவினர். அம்மந்திரங்களை சிவபெருமான் தமது திருப்பாத சிலம்புகளாக வரித்து அருளி சடைதாழ சிலம்பொலிக்க அம்முனிவர்களுக்கு எதிரே நான்கு கரமும், நுதல்விழியும், கரைக் கண்டமும் தோன்ற கணங்கள் துணங்கைக் கூத்தாட அரிய திருநடனம் ஆடத் தொடங்கினார்.

அக்னியையும் இழந்து மந்திரங்களையும் இழந்த அம்முனிவர்கள் அந்நடன வேகத்தைத் தாங்க முடியாது வீழ்ந்தனர். மோகினி உருக்கொண்ட திருமாலும்

நடுங்கினர். சிவபெருமான் நாக கங்கணம் அணிந்த திருக்கரத்தால் அஞ்சேல் என்று அவரை அமைதிப் படுத்தினார். அந்நேரத்தில் பார்வதி தேவியார் இடப வாகனத்தோடு எழுந்தருளி வந்து சிவபெருமானின் இடப்பாகத்தோடு வந்து பொருந்தினார். சிவபெருமான் மகிழ்ந்து அம்மையார் மீது திருக்கடைக்கண் சாத்தி அருளினார். தேவர்கள் எல்லாம் அப்போது மலர்மழை பொழிந்தனர். பிரம்மாதியர் அனைவரும் சிவபெருமான் திருமுன் வந்து நிலத்தில் வீழ்ந்து வணங்கினர். திருமாலும் தன் பெண் வடிவம் ஒழித்து முன்னை உருப்பெற்று பிரம்மாதியர்களுடன் சென்று சிவபெருமானை நமஸ்கரித்து நின்றனர். சிவபெருமான், பார்வதி தேவியாரும், தேவர்களும் காண ஒப்பரிய திருக்கூத்துகள் ஆடி தேவர்களை நோக்கி இன்பக்கூத்தை சிவலிங்கத்தின் இடமாக தியானித்து உய்யுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளி பார்வதிதேவியாரோடு விண்ணில் மறைந்தார் என கோயிற்புராணம் கூறுகின்றது.

இவ்வரலாறு வேதத்தில் விதிக்கப்பட்ட யாகாதி கர்மங்கள் ஒழிந்து சிவவழிபாடு சிறக்கத் தொடங்கிய சரித உண்மையை குறிக்க எழுந்தது என்பது அறிஞர் சிலரின் கருத்தாகும். மீமாம்சையாவது உலகம் முதல் ஈரற்ற உள்பொருள் எனவும் ஆன்மாக்களின் வேராக ஆண்டவன் ஒருவன் இல்லையெனவும் சிவன் முதலிய சத்தங்களே பிரம்மம் எனவும் வேதம் விதித்த கர்மங்களே இருமைப் பயன்களையும் பயக்கும் எனவும் கூறுவது 'பொதுவில் நடித்தோன்' என்பதால் காணக்கிடைக்கும் வரலாறு.

மத்தியந்தின முனிவருக்கு சிவபெருமானுடைய திருவருளால் பிறந்த தமது அருமை ஆண் குழந்தைக்கு நாமகரணம் போன்ற சடங்குகள் அத்தனையும்

முறைப்படி செய்து முடித்து ஸ்ரீபஞ்சாட்சர மந்திரத்தையும் உபதேசித்தார். குழந்தாய் உனக்கு மேலும் செய்யவேண்டியதென்ன? என்று வினவியதற்கு தந்தையாரின் திருவடிகளை வணங்கி வேதாகமங்களில் கூறப்பட்ட தவ வகைகளுள் சிறந்தது எது என்று கூறுமாறு குமாரர் வேண்டினார். தந்தையாரும் சிவார்ச்சனையே சிறந்தது என்று கூறினார். தனயரும் அதனை ஏற்றுக் கொண்டு, மேலும் வினவினார் சிவபெருமான் திருவுளங் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருத்தலம் யாது என்பதை அடியேனுக்கு தெரிவியுங்கள் என்று இரந்தனர். அதற்கு தந்தையாரும் உலகமெல்லாம் சிவ சன்னிதியேயாம் அப்படிக் காணாமை தவக்குறை என்பதை அறிவாய் என்றார்.

ஆயினும், பசுவின் மடி முழுவதும் நிறைந் திருக்கும் பாலமுதம் முலைக்காம்பில் வெளிப்பட்டுத் தோன்றுவது போல, உடலெங்கும் உள்ள ஆன்மாவானது உள்ளக் கமலத்தை சிறப்பிடமாகக் கொண்டதுபோல, இறைவன் எங்கும் நிறைந்திருப்பினும் சிறப்பாகக் கொண்டிருக்கும் இடமும் ஒன்று உண்டு. அந்த இடம் தில்லை மூலத் தானமே ஆகும் என்றார். அதன் காரணத்தையும் விளக்கி அருளினார். புதல்வர் அவர் உரைத்தவற்றைக் கேட்டுக் கொண்டு பெற்றோர்களை வணங்கி விடைபெற்று, தில்லைக்குச் செல்லலானார். அவ்விடத்தை அடைந்து தில்லைவனத்தின் மேற்புறம் உற்று நோக்கி ஆங்கொரு மரநிழலில் சிவலிங்கம் ஸ்தாபித்து நாடோறும் அதை அருச்சித்து வழிபாடு செய்து வந்தார். அப்போது அருச்சனைக்காகும் பூக்களைக் குற்றமற ஆய்ந்து கொய்வது அரிதாக இருந்ததால் அதற்காக வருந்தி சிவபெருமானை வேண்டவே அவரால் புலி நகங்களுடைய கால்களும், கைகளும் பெற்றதன்றி

ஒவ்வொரு நகத்திலும் ஒவ்வொரு கண்ணும் அமையப் பெற்றார். அதுமுதல் அவர் வியாக்ரபாதமுனிவர் எனவும் புலிக்கால் முனிவர் எனவும் அழைக்கப்பெற்றார். இவ்வாறு பூக்களை குற்றமற ஆய்ந்து கொய்வதற்கு ஏற்ற அவயங்களைப் பெற்ற இம்முனிவர் சிவார்ச்சனையைக் குறைவற நடத்திவரும் நாட்களில் தந்தையாரின் விருப்பத்திற்குட்பட்டு வசிட்ட முனிவரின் தங்கையை மணந்து உபமன்னியரைப் பெற்றார்.

ஒருநாள் தில்லை சன்னிதியில் சிவநிஷ்டையில் ஆழ்ந்திருக்கும்போது தனது ஞானத்தின் மூலம் தாருகாவனத்தில் நாற்பத்தெண்ணாயிர முனிவர் களுடைய மோகத்தை சிவபெருமான் ஒழித்து ஆனந்த தாண்டவம் செய்தருளியதை அறிந்தார். உடனே அத்திருத்தாண்டவத்தை தாம் தரிசிக்க முடியவில்லையே என வருந்தினார். பின்னர் தம் தந்தை கூறியதை நினைவிற்கு கொண்டுவந்து இந்தத்தலமே பொதுவாய் சம்சார வழக்கறுக்கும் அம்பலம் என்பதை தெளிந்து இங்கே சிவபெருமான் தமது திருநிருத்தத்தை தரிசிக்க தந்தருளுவார் என மன அமைதியுற்று அன்புடன் வழிபாடு செய்து வந்தார்.

இவரைப் போலவே ஆதிசேடனும் திருமால் மூலம் நிகழ்வை அறிந்து தானும் சிவபெருமான் தாருகா வனத்தில் இயற்றி அருளிய திருக்கூத்தை தரிசிக்க விரும்பித்தவம் செய்தார். சிவபெருமான் ஆதிசேடனின் தவத்திற்கிரங்கி தாருகாவனம் பூமியின் மையமானதால் அன்று யாம் ஆடிய திருக்கூத்தால் உலகமே அசைந்தது. எமது நடனத்தைப் பொறுக்கக் கூடிய இடம் தில்லை மூலத்தானமே. அங்கு உன்னைப் போலவே வியாக்ரபாத முனிவனும் எமது திருநடனத்தைக்காண நெடுந்தவம் செய்து வருகின்றான். நீ இவ்வுருவத்துடன் சென்றால்

உலகத்தினர் உன்னைக் கண்டு அஞ்சுவர். ஆகவே, நீ இந்த உருவத்தை விட்டு பதஞ்சலி முனிவனாகத் தில்லை வனத்தையடைந்து அருந்தவம் செய்யும் வியாக்ர பாதனோடு மூலத்தான வெளியில் காத்திரு. தைப்பூசம் குருவாரத்தோடு பொருந்துகிற சித்தயோக தினத்தில் யாம் அவ்விடத்தில் நீங்கள் தரிசிக்கும்படி ஆனந்த நடனஞ் செய்தருள்வோம் என்றருளி மறைந்தார்.

ஆதிசேடனும் பதஞ்சலி முனிவராக மாறி தில்லை வனம் சென்று அங்கு வியாக்ரபாதரைக் கண்டு அளவளாவி சிவபெருமான் குறித்த இடத்தில் அவர் கூறிய நாள் வரும்வரை காத்திருக்கலாயினர். அந்நாளும் வந்தது. அன்று இவ்விருவரும், முனிவரர் மூவாயிரரும், அரி பிரம்மன் முதலிய தேவருங்காண சிவபெருமான் தில்லைப்பொதுவில் திருநடனஞ் செய்தருளினர்.

ஒப்பனை மைப்பரந் தெறிக்கும் விழியினால் உருகி ஒருபுற மளித்த விமலனே என்பதால் பெறக் கிடைக்கும் வரலாறு, சிவபக்தரான பிருங்கி முனிவர் நாள்தோறும் சிவபெருமானை வணங்கி வழிபட்டு அவரை மட்டும் வலம் வரும் நெறியுடையவர். அவர் தன்னை மட்டும் நீக்கிவிட்டு சிவபெருமானை மட்டும் வலம் வருதலைக் கண்ட தேவியார் இறைவனை நோக்கி முனிவர் தங்களை மட்டும் வலம் வருதலின் காரணம் என்ன என்று வினவுகிறார். அதற்கு சிவபெருமான் இஷ்ட சித்தி பெற விரும்புவோர் உன்னையும் முக்திபெற விரும்புவோர் என்னையும் வலம்வருவர் என்றார். அதைக் கேட்ட உமாதேவியார் சிவபெருமானைப் பிரியாதிருக்கத் தவம் இயற்றத் தொடங்கினார்.சிவபெருமானும் தேவியின் தவத்திற் கிரங்கித் தமது இடப்பாகத்தை அளித்தார்.

'நாரண னறியாத் திருவுரு' என்பதற்கு கிடைக்கும் வரலாறு. ஒரு காலத்தில் பிரம்மனும் திருமாலும் தாந்தாம் தலைவர் என தருக்கி வாதிட்டனர். அப்போது அவர்களின் தருக்கத்தை அடக்க திருவுளம் கொண்ட சிவபெருமான் இருவருக்கும் இடையே தோன்றி எமது அடியையேனும் முடியையேனும் எவர் காணமுடி கிறதோ அவரே தலைவர் என்றருளினார். அது கேட்டு பிரம்மன் 'யான் முடிகாண்பேன்' என்று அன்னத்தின் உருவம் கொண்டு எழுந்து விண் சென்றார். திருமாலும் 'யான் அடி காண்பேன்' என்று வராக உருக்கொண்டு பூமியை தோண்டிக் கொண்டும் அடியையும், முடியையும் தேடினர். நெடுங்காலம் தேடியும் இருவரில் எவரும் சிவபெருமான் அடியையோ அல்லது முடியையோ காணமாட்டாமல் ஒய்ந்து போய் தம்முடைய தர்க்கத்தை விட்டொழித்தனர்.

'குறுமுனிவபரவ' என்றதால் பெறக்கிடைக்கும் வரலாறு:- சிவபெருமானின் திருக்கல்யாணச் சிறப்பைக் காண அனைவரும் திரண்டு இமயமலைக்குச் சென்றதால் வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்தது-அது கண்டு பலரும் வருந்த சிவபெருமான் அகத்தியரை நோக்கி 'நீங்கள் தென்திசையில் போய் இரும். பூமி சமநிலை அடைந்துவிடும்' என்று கூறவே அகத்தியரும் உத்தரவு என்று கூறி புறப்படலானார். ஆனால், நம்பெருமானின் திருமணக் கோலத்தைத் தரிசிக்க முடியவில்லையே என வருந்தினர். அஃதறிந்த இறைவர் 'யாம் உமக்கு தென் திசையில் வந்து மணக்கோலங் காட்டுவோம்' என்று அருளி பின்னர் அவ்வாறே செய்தனர்.

'குமரனா லடுஞ் சூர்ப்பகை தடிந்தவன்' என்றதால் கிடைக்கப்பெறும் வரலாறு:- சூரபத்மன் எனும் அசுரன் சிவபெருமானைக் குறித்து அருந்தவஞ் செய்து பல

வரங்ளைப் பெற்றான். அதனால் செருக்குற்று இந்திரன் முதலான தேவர்களைத் துன்புறுத்தி வந்தான். அதனை பொறுக்கமுடியாத தேவர்கள் சிவபெருமானை அடைந்து தமது குறையைச் சொல்லி முறையிட்டனர். சிவபெருமான் அவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கி குமாரக் கடவுளை உண்டாக்கி அவ்வசுரனை கொன்று வரும்படி அனுப்பினார். குமாரக் கடவுள் சிவகணங் களுடனும் பல்லாயிரம் வீரர்களுடனும் சென்று சூரபத்மனையும் அவனைச் சேர்ந்த கொடியவர்களையும் கொன் றொழித்தார்.

"ஒன்றலர் புரம் நீற்று, பெருவை யம்பௌக் கண்ணனை உடையன்" என்றதால் பெறக் கிடைக்கும் வரலாறு:- தாரகாசுரனது புத்திரர்களாக வித்யுந்மாலிகை, தாரகாக்ஷன், கமலாக்ஷன் எனும் அசுரர்கள் மூவர் இருந்தனர். அவர்கள் கடுமையான தவம் செய்து மயன் எனும் அசுரத் தச்சனால், சுவர்க்கலோகம், மத்திய, பாதாளங்களாகிய மூன்று இடங்களிலும் அந்தரத்தில் சஞ்சரிக்கக் கூடிய மூன்று பட்டணங்களை முறையே இரும்பினாலும், வெள்ளியினாலும், கனகத்தினாலும் பெற்றனர். அவையே முப்புரங்கள் ஆகும். அவற்றின் உதவியால் அவர்கள் தம்மோடொத்த அசுரர் பலரையும் உடன் சேர்த்துக்கொண்டு நினைத்த இடத்திற்கு சென்று அங்குள்ளவர்களைக் கொன்றும், வருத்தியும் திரிந்தனர். அவர்களது கொடுமை தாங்காமல் தேவர், முனிவர் முதலானோர் சிவபெருமானை சரணடைந்து அவர்களை அழிக்க வேண்டினர்.

இறைவனும் அவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கி சந்திரனும், சூரியனும் சக்கரங்களாகவும் வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும் அமைந்த பூமியாகிய தேரின் மீது ஆரோகணித்து,

மேருமலையை வில்லாகவும், ஆதி சேடனை அதற்கு நாரியாகவும், அக்கினியை அம்பாகவும். வாயுவை அந்த அம்பின் சிறகாகவும், திருமாலை அம்பின் முனையாகவும் கொண்டு அசுரர் முப்புரங்களையும் அந்த அம்பால் எய்து அழிக்க திருவுளங் கொண்டார். அப்போது சிவபெருமான் நம்மால் தான் திரிபுரங்களை எரிக்கப்போகிறார் என சந்திரன், சூரியன் முதலான தேவர்கள் இறுமாப் படைந்தனர். சிவபெருமான் அவர்களின் மனநிலையை அறிந்துகொண்டு என்னே இவர்களின் அறியாமை இன்னமும் நமது பேராற்றலை உணராது கர்வத்துடன் இருக்கின்றனரே. இவர்களுக்கு நம்முடைய ஆற்றல் இன்னதெனத் தெளிவுறக் காட்டி இவர்கள் தம் சிற்றறிவால் கொண்ட இறுமாப்பை ஒழிக்கவேண்டும் என நினைத்து முப்புரங்களும் அழிய வென்று புன்னகை புரிந்தார். அப்போதே அந்த முப்புரங்களும் எரிந்து சாம்பலாயின. அத்துடன் திரிபுரங்களிலும் உள்ள அசுரர்களும் அழிந்தனர். இதிலிருந்து தேவர்களும் தமது கர்வம் அடங்கினர்.

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களையும் சிவனருளால் சுட்டெரித்தலை விளக்க எழுந்தது இந்த வரலாறு என்பர் அதனை

**அப்பணி செஞ்சடையெம் ஆதி புராதனன்**
**முப்புர மழித்தன னென்பர்கள் மூடர்கள்**
**முப்புர மாவது மும்மல காரியம்**
**அப்புர மழிந்தமை யாரறி யாரே**

என்று திருமந்திரத்திருவாக்கும் வலியுறுத்துகிறது.

"பாலற்காச் சினத்த காலனை யுதைத்தவன்" என்றதால் பெறக்கிடைக்கும் வரலாறு:- மிருகண்டு

முனிவர் தமக்கு புத்திரப் பிராப்தி வேண்டி தவம் இருந்தார். அப்போது இறைவன் அவர் முன் தோன்றி நினக்கு நிறை ஆயுளுடைய குமரன் வேண்டுமா? நிறை குணமுடைய குமரன் வேண்டுமா? என வினவ முனிவரும் 'நிறை குணமுடைய புதல்வனே வேண்டும்' என்றார். இறைவனும் அவ்வாறே அருள்செய்து மறைந்தார். உரிய காலத்தில் முனிவர்க்குத் தவக்குமாரர் ஒருவர் பிறந்தார். அவருக்கு மார்க்கண்டேயன் எனப் பெயரிட்டு வளர்ந்து வந்தனர் பெற்றோர். சிவபெருமான் அருள்செய்தவாறே மார்க்கண்டேயனார் சிவபக்தியில் இளமை முதலே ஈடுபட்டு நிறைகுணச் செல்வராய் விளங்கினார். ஆனால், அவருக்கு வரையறுக்கப்பட்ட ஆயுள் காலமோ பதினாறாண்டுதான். அந்த ஆயுள் காலமும் நெருங்கி வந்தது. காலனும் அவர் உயிரை கொண்டு செல்ல பாசக்கயிற்றை கட்டி ஈர்க்கலாயினன். அதுகண்ட மார்க்கண்டேயன் சிவபெருமானைச் சரணடைந்தார். அந்தளவில் சிவபெருமான் சினம் கொண்டு தம் அன்புடைய பக்தரை ஈர்த்த கூற்றுவனைக் காலால் உதைத்து வீழ்த்தி சிறுவனுக்கு என்றும் பதினாறாய் வாழ வரந்தந்து அருளினார்.

'பௌவ நஞ்ச முண்டான்' என்றதால் பெறக் கிடைக்கும் வரலாறு:- முன் ஒரு காலத்தில் தேவர்களும், அசுரர்களும் தமக்கு மரணம் நேராதிருக்க அமிழ்தம் வேண்டி பிரமனிடம் சென்று தமது விருப்பத்தைத் தெரிவித்தனர். பிரமன் அவர்களுடன் திருமாலிடம் சென்று பாற் கடலைக் கடைந்து அமிழ்தம் தந்தருளும்படி வேண்டினர். திருமால் அதற்கிசைந்து கருடனால் மந்தரமலைக் கொணர்ந்து அதனை பாற்கடலில் மத்தாக நாட்டி வாசுகி எனும் பாம்பை அதில் தாம்பாகப் பூட்டி ஒருபுறம் தேவர்களும் மறுபுறம் அசுரர்களுமாக நின்று

கடைந்தனர். அவ்வாறு கடையும்போது வாசுகி வருத்தம் தாங்காமல் விஷத்தைக் கக்க அஃது அங்கிருந்தார் அனைவரையும் கொல்ல எழுந்தது. அதைக் கண்டு அஞ்சிய தேவர்கள் சிவபெருமானை சரணடைந்தனர். தேவர்களைக் காப்பதற்காக அவ்விஷத்தை தாம் உண்டு தம் கண்டத்தில் நிறுத்தியதால் நீலகண்டர் ஆனார்.

'தலைக்கொள் வெண்டலை மாலையன்' என்பதில் கிடைக்கும் வரலாறு:- சிவபெருமான் நான்முகனைக் கொண்டு உலகங்களைப் படைத்தும் , திருமாலைக் கொண்டு உலகங்களைக் காத்தும், தமது ருத்திர அம்சத்தினால் உலகங்களை அழித்தும் வந்தார். ஆதலால் அவரது சம்ஹார கிருத்தி யத்தில் பிரம்ம விஷ்ணுக்களும் அவரவர்க்கு வரையறுத்த கால எல்லையில் மாய்க்கப்படுவார்கள் அப்போது அவர்கள் கொண்டிருந்த தேவ சரீரம் புனிதமடைந்து அவர்கள் நற்பேறு பெற வேண்டுமென்ற அருள் நோக்கத்தால் சிவபெருமான் அவர்களின் எலும்புகளையும், சிரங்களையும் மாலை யாகக் கோத்து தமது ஆகத்தில் அணிந்து கொள்வர். இதனால் சிதாகாசத் திருமேனியுடைய எம்பெருமான் 'வெண்டலை மாலையன்' ஆயினார்.

'தண்ணிலா மிலைக்கும் தென்கருவாபுரி வேதியன்' என்பதால் பெறக்கிடைக்கும் வரலாறு:- தக்கன் தனது புத்திரிகள் இருபத்தேழு (தாரகைகள்) பேரையும் சந்திரனுக்கு மணம் செய்து கொடுத்து 'நீ இவர்கள் அனைவரையும் ஒரு தன்மையாகப் பாராட்டி காதலித்து வாழ்க' என கூறினான். ஆனால், சந்திரனோ சிறிது காலம் அவ்வாறு இருந்துவிட்டு அந்த இருபத்தேழ்வரில் மிக அழகுடையவர்களான கார்த்திகை மற்றும் ரோகினி ஆகிய இருவரிடம் மட்டும் அதிக காதல் கொண்டு

இருந்தான். ஆகையால், தந்தையாகிய தக்கனிடம் முறையிடவே தக்கன் கோபம் கொண்டு சந்திரனுடைய சோடச கலைகளும் நாளுக்கொன்றாகத் தேய்ந்து ஒழியக் கடவது என சாபமிட்டான். அதன்படி சந்திரனுக்கு நாளுக்கொரு கலையாகத் தேயத் தொடங்கி பதினைந்து கலைகள் தேய்ந்தொழிந்தன. அது கண்ட சந்திரன் எஞ்சியுள்ள ஒரு கலையும் ஒழிந்துவிடுமே என அஞ்சி சிவபெருமானிடம் சென்று முறையிட்டான். எனவே, சிவனும் தனது சடையில் தரித்துக் கொண்டார். அங்கு இருக்கும்போது தக்கனின் சாபம் பலிக்காது என்பதால், மேலும் தக்கனின் சாபத்திற்குப் பரிகாரமாக ஒவ்வொன் றாகத் தேய்ந்த சோடசக் கலைகள் பின்னர் நாளுக் கொன்றாக வளர்ந்து நிறைவுபெறும். இவ்வாறு நாளுக்கு நாள் குறைந்தும் பின்னர் வளர்ந்தும் மாறி மாறி ஏற்பட்டு வர அருள் செய்தார். இதனால் சிவபெருமானின் சடையில் தரித்திருக்கும் சந்திரன் ஒரு கலையுடைய பிறைச் சந்திரனே என்பதும் அந்நாள் மறைமதி நாளாகும்.

'மால்விடையான்' என்றதால் பெறக் கிடைக்கும் வரலாறு:- தருமதேவதையானது சர்வசம்ஹார காலத்தில் பிரம்மாதி தேவர்களும் அழிவார்கள் என்பதால் அக் காலத்தில் தான் இறவாதிருக்கும் பொருட்டு ரிஷப ரூபமாகி சிவனை அடைந்து தோத்திரம் செய்து தான் என்றும் அழியாதிருக்க தன்னை வாகனமாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டியது. சிவபெருமானும் அவ் வேண்டுகோளுக்கு இணங்கி அதனை தமது வாகனமாக ஏற்றுக்கொண்டார்.

இதுமட்டுமன்றி சிவபெருமான் திரிபுரதகனம் செய்த காலத்தில் திருமால் அவருக்கு ரிஷப வாகன மாயினர் என்பதும் ஒன்றாகும். 'திரிபுரங்களவை மூன்றும்

தழலெரித்த அந்நாளில் திருமாலே இடபமாய் தாங்கினன் காண் சாழலோ’ என்ற திருவாதவூரடிகள் திருவாக்கினையும் காணலாம்.

முடைத்தலையிற் பலிகொள்ளும் முகலிங்கா என்றதால் பெறக்கிடைக்கும் வரலாறு:- முன் ஒரு காலத்தில் பிரமன் தானே முதற்கடவுள் என கர்வம் கொள்ள அதனை அடக்க சிவபெருமான் பிரமன் முன் தோன்றினார். அப்போதும் பிரமன் அவரே தனிமுதல்வர் என்பதை உணராது அவரை இகழ அவர் தனது அம்சமாகிய வைரவக் கடவுளை நோக்கினார். உடனே வைரவர் பிரம்மனது ஐந்து சிரசில் நடுவில் உள்ள சிரசை தமது இடக்கை விரல் நுனி நகத்தால் கொய்தார். கொய்த சிரம் அவர் விரலோடு ஒட்டிக்கொண்டது. அப்போது சிவபெருமான் தருமத்தை உலகினர் அறிந்து நடக்க தாமே அதை நடத்திக் காட்ட வேண்டுமென்று வைரவரை நோக்கி இப்பாவந் தொலைய பிச்சையெடுக்க வேண்டும் என்று கூற, அவரும் அங்ஙனமே அப்பிரம கபாலத்தில் பிச்சை யெடுத்தார்.

‘அத்திக்கு முன்னம் வரமேயளித்த கருவேச’ என்றதால் கிடைக்கும் வரலாறு:- முன்னொரு காலத்தில் ஒரு யானை சீகாளத்தியில் (ஸ்ரீகாளஹஸ்தி) பொன் முகலியாற்றில் நாள்தோறும் நீராடி துதிக்கையில் பூ கொண்டுவந்து சிவபெருமான் திருமுடியைச் சொரிந்து அர்ச்சனை செய்து வழிபாடு செய்து வந்தது. சிவபெருமானும் அந்த யானை முன்னமொருகால் கயிலையில் தமது தேவியின் சாபத்தினால் யானை வடிவம் கொண்ட அத்தி என்னும் கணநாதன் என்பதை உணர்ந்து, தேவியுடன் ரிஷபா ரூடராக அத்திக்கு தரிசனம் தந்து முத்தியும் அருளினார்.

'கடவாரணத்தி னுரிபோர்வை கொண்ட கருவேச' என்றதால் பெறக்கிடைக்கும் வரலாறு:- கயாசுரன் என்னும் அசுரன் அரிய தவங்கள் செய்து தான் தேவர்களையும் வெல்லக் கூடிய ஆற்றல் படைத்தவனாக வேண்டும் என்று பிரமனிடம் வேண்ட பிரம்மனும் அவ்வாறே வரம் தந்தருளி மேலும் நீ சிவபெருமானிடம் செல்லாதே சென்றால் இவ்வரம் அழிந்துவிடும் என்று எச்சரித்து அனுப்பினார் ஆனால் நாளடைவில் கயாசுரன் செருக்குற்று தேவேந்திரன் முதலியவர்களை வென்று, முனிவர்களைத் துன்புறுத்தத் தொடங்கினான். முனிவர்கள் அவனைக் கண்டு அஞ்சி ஓடி மணிகர்ணிகை எனும் ஆலயத்தில் அமைந்திருந்த சிவபெருமானிடம் சென்று அடைக்கலமாகியிருந்தார்கள். கயாசுரன் பிரம்மன் கூறியதை மறந்து முனிவர்களைத் தொடர்ந்து சென்று அவர்களைக் கொல்ல எத்தனித்தான். உடனே சிவபெருமான் உக்கிர சொரூபமாகி யானை முக உருவினான கயாசுரனின் மத்தகத்தை மிதித்து உடலை கிழித்து தோலை உரித்துப் போர்வையாகக் கொண்டரு ளினார்.

கவிஞனேவ நள்ளிருட்போதிற் சென்ற தூதனே என்றதால் கிடைக்கும் வரலாறு:- சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரில் பரவை நாச்சியாரைக் காதலித்து அவரைத் திருமணம் செய்து கொண்ட பிறகு, சங்கிலி நாச்சியாரை திருவொற்றியூரில் விவாகம் செய்துகொண்டார். அஃதறிந்த பரவையார் மீண்டும் நாயனார் திருவாரூரில் தம்மை விரும்பி வந்தபோது ஊடல் கொண்டு அவர் தம்மை அணுக வொட்டாமல் தடுத்தார். அப்போது சுந்தரமூர்த்தி நாயனார் பரவையின் ஊடலைத் தீர்க்கும்படி எம்பெருமானை வேண்ட சிவபெருமான் ஓர் ஆதி சைவராக வடிவங்கொண்டு, நள்ளிரவில் பரவையார் பால் இருமுறை சுந்தரருக்காக தூது சென்று அவள் ஊடலைத் தீர்த்து இருவரும் கூடி மகிழும்படிச் செய்தார்.

**அதி வீரராம பாண்டியன்**

**அருளிய**

# திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

## காப்பு

ஆன கருவைப் பதிற்றுப்பத்
தந்தா திச்சொல் அலங்கல்முற்றும்
ஞான உருவாம் களவீசன்
ஒளின சரண மிசைச்சாத்தத்
தான அருவி பொழி தடக்கைத்
தறுகட் சிறுகட் புகர்முகத்துக்
கூனல் இளவெண் பிறைகோட்டுக்
குணகுஞ் சரத்தின் அடிதொழுவாம்.

*பொருள்:* ஞானவடிவாக விளங்கும் திருக்களா ஈசனின் தாமரை மலர் போன்ற திருவடிமீது திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதியான சொல் மாலையைச் சாத்த, மதத்தை அருவிபோல் சொரியும் நீண்ட தும்பிக் கையையும், அஞ்சாமையையும், சிறிய கண்களையும், புள்ளி வாய்ந்த முகத்தையும் வளைந்த இளமையான வெள்ளிய பிறை போன்ற தந்தங்களையும் உடைய குண விநாயகரின் திருவடிகளை வணங்கித் தொழுவோம்.

யானை முகத்தர் ஆதலால் விநாயகரைக் குஞ்சரம் என்றார். ஈறும் முதலும் ஒன்றி மண்டலித்து மாலைபோல் முடிதலின் அந்தாதியான சொல்லலங்கள் என்றார். அந்தாதியாகத் தொடராத இடத்தும் சொற்களின் தொடர்ச்சியை மாலை என்றல் மரபு ஆகும். சொல் மாலை பயில்கின்ற குயிலினங்காள் என வருதல் காண்க.

குண விநாயகர் என்பது இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் விநாயகரின் சிறப்புப் பெயராக இருக்கலாம். அன்றேல் அருள் குணமுடைய விநாயகர் என்றும் கொள்ளலாம்.

எழுதத் தொடங்கிய நூல் இடையூறுகள் ஏதும் இன்றி இனிதாக முடிவடைய வேண்டும் என்பதற்காக விநாயக வணக்கம் கூறுதல் மரபாகும். இம்மரபின் காரணமாகவே இங்கு விநாயகர் வணக்கத்துடன் தொடங்கப்பெற்றது. தம்மை முன்னிறுத்தி வழிபட்டு ஒரு கருமம் செய்ய நினைப்போருக்கு அக்கருமத்தில் நேரிடக்கூடிய விக்கினங்களை நீக்கும் காரணம் பற்றி விநாயகருக்கு விக்கின விநாயகர் என்ற பெயர் வழங்குதலும் இங்கு குறிக்கத்தக்கது. விக்கினம்-இடையூறு.

*அலங்கள்-மாலை, களவீசன்-திருக்கருவையில் களாமரத்தின் கீழ் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான். நளினம்-தாமரை, தானம்-மதம், தடம்-பெருமை, தறுகண்-அஞ்சாமை, புகர்-(யானையின் முகத்திலுள்ள) புள்ளிகள், கூனல்-வளைவு, குஞ்சரம்-யானை, ஆன-இறந்த கால பெயரெச்சம், நளின சரணம், குண குஞ்சரம்-என்பன வடமொழித் தொடர் ஆதலின் இயல்பாய்ப் புணர்ந்தன, பிறை-தொழிலாகு பெயர், பிற-பகுதி, ஐ-விகுதி, அகரக் கேடு சந்தி.*

## முதற்பத்து

மூன்றாம் சீரும் ஆறாம் சீரும் காய்ச்சீர்களாகவும் மற்றை நான்கும் மாச்சீர்களாகவும் வந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்

சீரார் கமலச் சேவடி என்
சிந்தை இருத்தி உனதுதிருப்
பேர்ஆ யிரமும் எடுத்தோதிப்
பெம்மான் கருவை எம்மான் என்று

ஆரா அமுதம் உண்டவர்போல்
அனந்தா னந்தத் தகம் நெகிழ
ஆரா இன்பம் அறிவித்தாய்
அறியேன் இதற்கோர் வரலாறே. 1

*பொருள்:* அழகுடன் அமைந்த தாமரை மலர் போன்ற செவ்விய உன் திருவடிகளை என் உள்ளத்தில் பதித்து, உன்னுடைய ஆயிரம் திருநாமங்களையும் எடுத்துக்கூறி. பெருமானே திருக்கருவையில் எழுந்தருளி யிருக்கும் எம் இறைவனே எனத் துதித்து. தெவிட்டாத அமுதத்தை உண்டவர் போல் அளவற்ற ஆனந்தத்திலே உள்ளமானது உருகித்தோய்ந்து யான் இதுவரையும் அனுபவித்தறியாத இன்ப நிலையினை எனக்குக் காட்டி அருளினாய். இத்தகு அருட்செயலுக்கு ஆன காரணம் யாதென்று அறியேன்.

*அந்தம்-முடிவு, அனந்தம்-முடிவில்லாதது, அநந்த ஆனந்தம்-முடிவில்லாத இன்பம் அதாவது பேரின்பம். வரல் ஆறு-வருவதற்கான வழி. அதாவது காரணம் பேரின்பத்தில் உள்ளம் உருகுதலானது. தான் எனும் தன்மை கெட்டு இன்ப மயமாய் நிற்பது. ஆர்தல்-நிறைதல், தெவிட்டுதல். ஆரா இன்பமாவது-அனுபவியாத இன்பம், இங்கே ஆர்தல் அனுபவித்தல். தன் அனுபவத்துட்படாத ஒன்றைப் பிறர் அறிவிக்க அறிந்து அனுபவித்தல் இயல்பாதல் எனவே “ஆராவின்பம் அறிவித்தாய்” என்றார். பேரின்ப நிலையை எனக்கு நீ அறிவித்தது எனது முன் நல்வினைப் பயனாலோ அன்றி உன் பேரருள் பெருக்கத்தாலோ அறியேன் என்றார் வாரா இன்பம் எனக் கொண்டும் பொருள் உரைப்பது உண்டு. மோனையின்பமும் பொருட்சிறப்பும் ஏற்றவாறு கொள்க. தொடக்கத்தில் மங்கல மொழி கூறும் மரபு பற்றி இந்நூலும் சீர் என்னும் மங்கல மொழியால் தொடங்கப் பெற்றுள்ளது சிறப்பான ஒன்றாகும்.*

ஆறாக் காமக் கொடியகனல்
ஐவர் மூட்ட அவலமனம்
நீறாய் வெந்து கிடப்பேனை
நின்தாள் வழுத்த நினைவுதந்து
மாறா நேயத் திரவுபகல்
மறவா திருக்க வரமளித்தாய்
சீறா டரவம் முடித்தசடைக்
கருவை வாழும் செழுஞ்சுடரே. 2

*பொருள்:* சீறி ஆடும் பாம்பினைத் தரித்துக் கொண்ட சடையினையுடைய திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் நிறைந்த ஒளிப்பிழம்பே. என்றும் அவியாத நெருப்பாகிய கொடிய காமத்தினை ஐம்புலன்களும் வளர்க்க, அதனால் கேடுற்ற மனம் நீறாகும்படி வெந்து கிடக்கும் எனக்கு, உன்னுடைய திருவடிகளைத் துதிக்க நினைவு கொடுத்தால் மாறுபாடு இல்லாத உன் திருவருளினாலே உன் திருவடிகளை வழுத்தும் செயலை நான் இரவும் பகலும் மறவாமல் இருக்க வரம் கொடுத்து அருளிச்செய்தாய். உன் பேரருளை என்னென்பது, என இசையெச்சம் கொள்க.

உடல் உள்ளளவும் உடனிருந்து உடலையும் உணர்வையும் அழிக்கும் இயல்புடையது ஆனதால் காமத்தை ஆறாக் கொடிய கனல் என்றார். ஐவர் என்ற சொல் காமத்தீயை மூட்டுவதாகிய குறிப்பால், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களை உணர்த்தியது. "கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே யுள வாதலால், ஐம்புலனும் ஒருங்கே நின்று மூட்டுதற்கிடமாவது காமமேயாதல் உணர்க. அவன் அருளாலே அவன் தாள் வணங்கி என்றார்போல உனது அருளாலே உன்தாள்

வழுத்த மறவாதிருக்கின்றேன்" என்பார். மாறாநேயத் திரவுபகல் மறவாதிருக்க வரம் அளித்தாய் என்றார்.

*அவலம்-கேடு, நேயம்-அருள், சீறு ஆடு அரவம் என்னும் மும்மொழிகள் புணர்ந்து சீறாடரவம் என்றாயிற்று. கிடப்பேனுக்கு என்பதாவது கிடப்பேனை என்றானது உருபு மயக்கம்.*

சுடரே வலியத் தடுத்தாண்ட
துணையே பிறவித் தொடுகுழிவீழ்
இடரே யகலக் களாநீழல்
இருந்த கோவே எம்பெருமான்
உடலே ஓம்பித் திரியும்எனை
உன்னை நினைக்கப் பணித்தஅருட்
கடலே உனையன் றொருதெய்வம்
காண வழுத்தக் கடவேனே. 3

*பொருள்:* ஒளிப்பிழம்பே, வலிய அருள்செய்து என்னைத் தடுத்து ஆட்கொண்ட என் உயிர்த்துணையே. ஆவலினால் தோண்டப்படும் பிறவிக் குழியில் விழுந்து வருந்தும் வருத்தம் அகன்று நான் உய்யும் நிமித்தமாகத் திருக்களா நீழலில் எழுந்தருளியிருக்கும் இறைவனே. எம்பெருமானே அழியக் கூடிய உடலை ஒரு பொருளாகக் கருதிப் பாதுகாத்துத் திரியும் என்னை, உன்னையே நினைத்து உய்யுமாறு ஏவிய கருணைக் கடலே, உன்னையன்றி மற்றொரு தெய்வத்தை நான் காணவும் கருதவும் நினைப்பேனோ?

பிறவித் தொடுகுழிவீழ் இடரே யகல வலிய தடுத்தாண்ட துணையே எனக்கொண்டு கூட்டிப் பொருள் உரைப்பினும் பொருந்தும். தொடுதல்-தோண்டுதல், தொட்டனைத்தூறும் மணற்கேணி எனும்

குறளடி காண்க. தொடுகுழி என்பதற்கு தோண்டப்பெற்ற கடல் என்று பொருள் கொள்வாரும் உண்டு. சகரரால் தோண்டப்பெற்றது என்பது கருதிப்போலும். குழி எனும் சொல் கடல் என்னும் அப்பொருளுக்கு இயைபு ஆதல் காண்க. அவா என்னும் பாரையால் வினை என்னும் நிலத்தைத் தோண்ட உண்டாம் குழி பிறவிக்குழியாகக் கொள்க. கொள்ளவே தான் தோண்டிய குழியில் தானே வீழ்தல் போல தன்வினைப் பிறவிக் குழியில் விழ அறியாமை எனும் மண் தன்மீது சரிந்து விழுந்து தன்னை ஆணவம் என்னும் அந்தகாரத்துக்கு உள்ளாக்கும். ஆயின் அந்த அந்தகாரத்தால் மீளும் வழி அறியாது துன்புற்றுத் தடுமாறும். அவ்வாறு தடுமாறுவதைத் தடுப்பதற்கும் ஒருகால் தவறி வீழினும் வெளி எடுப்பதற்கும் தம் பேரருள் பெருக்கத்தால் அருகு வந்திருக்கும் பெற்றிமை நோக்கி இடரே அகலக் களாநீழல் இருந்த கோவே என்றார்.

*ஓம்புதல்–காப்பாற்றுதல், புறத்தே சென்று ஒழுகிய என் உணர்வை அகத்தே மடங்கிச் செறியுமாறு செய்தனை என்பார். உடலே ஓம்பித் திரியும் எனை உன்னை நினைக்கப் பணித்தாய் என்றார். அன்பு ஆறாகப் பக்தர்கள் வந்து தன்னொடு கலந்து தன்னில் ஒடுங்குவதற்கு இடமாதல் கருதியும், அளவிடுதற்காகப் பெருமையுடைத்தாதல் பற்றியும் அருட்கடல் என்றார்.*

வேனிற் சிலைவேள் தொடுகணைக்கும்
விளங்கும் மகளிர் உளம்கவற்றும்
பானற் கொடிய விழிவலைக்கும்
பற்றாய் வருந்தி அனுதினமும்
ஈனத் துயரக் கடல்அழுந்தும்
எனையும் பொருளா அடிமைகொண்ட
ஞானத் துருவே தமிழ்க்கருவை
நம்பா பொதுவில் நடித்தோனே. 4

*பொருள்:* வேனிற் காலத்துக்கும் (கரும்பு) வில்லுக்கும் உரியவன் ஆன மன்மதன் எய்யும் காமக் கணைக்கும் அழகுடன் விளங்கும் மங்கையர்கள் தம் வசப்படுத்த வல்ல மனத்தைச் சுற்றி நீலோற்பவமலர் போன்ற கொடிய கண்களாகிய வலைக்கும் இலக்காக வருந்தி இழிவாகிய துன்பக்கடலில் நாள்தோறும் அழுந்திக் கிடக்கும் என்னையும் ஒரு பொருளாகக் கருதி ஆட்கொண்ட ஞான வடிவனே, தமிழ் நன்கு வழங்கக் கூடிய திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் இறைவனே. சிற்சபையில் ஆனந்த தாண்டவம் புரிபவனே, உன் பெருங்கருணைத் திறத்தை எவ்வாறு போற்றுவேன்.

*வேனிற்காலம் மன்மதனுக்கு உரியதாதல் பற்றி, அதற்கு வேனிலானி, வேனிலான் எனப்பட்டது. சிலை, வில், வேள்-மன்மதன், தொடுதல்-எய்தல், கணை-அம்பு, கவற்சி-கவலை-மனச்சுழற்சி, பானல்-நீலோற்பவம். காமம் முதலிய இழிகுண வசத்தால் உண்டாம் துயர் ஆதலின் ஈனத் துயரக் கடல் என்றார்.*

நடித்தேன் பொய்க்கூடு எடுத்துஅவமே
நன்னாள் கழிய இந்நாளில்
படித்தேன் உனது திருநாமம்
பண்டை வினையின் பற்றறுத்தேன்
பிடித்தேன் பிறவிக் கடல்நீந்தப்
பெரிய புணையா உனதடியை
முடித்தேன் உள்ளத்து எண்ணமெல்லாம்
கருவை வாழும் முன்னோனே. 5

*பொருள்:* திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் முதல்வனே. பொய்யான இவ்வுடலை எடுத்து நல்ல நாட்கள் யாவும் வீணே கழிய நடித்து ஒழித்தேன். இளமை கழிந்த இக்காலத்தில்தான் உன் திருநாமத்தை ஓதினேன். அதனால் என் பழவினையின் தொடர்பினை

விலக்கினேன். பிறவியாகிய கடலை நீந்தி முத்திக்கரை சேர்வதற்கு உன் திருவடிகளை ஒரு பெரிய தெப்பமாகக் கொண்டேன். இவ்வாறு என் உள்ளக் கருத்து அனைத்தையும் நிறைவேற்றிக் கொண்டேன். இனி எனக்கொரு குறையுமில்லை.

நடித்தேன் எனத் தொடங்கி முடிவில் என் எண்ணமெல்லாம் முடித்தேன் என்றார். திருநாமம் படிக்கப் பண்டைவினை ஒழிந்தது. வினை ஒழியப் பிறப்பு ஒழிந்தது, பிறப்பு ஒழிய முக்தி நிலை கிடைத்தது. எனக் காரண காரியத் தொடர்ச்சி பெறப்படுதலின் காரணமாலை அணி கொள்ளக் கிடக்கும். புனை-தெப்பம்.

சிவபெருமானை முன்னோன் என்றார். முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருள் ஆதல்பற்றி.

*நடித்தல்-பொய்யாக ஒன்றைச் செய்தல்-போலிச் செய்கை, நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து என்ற மாணிக்கவாசகரின் வாக்கினை இங்கு நோக்கலாம். கூடு-உள்ளீடில்லாதது. அவம்-வீண் நன்னாள் என்றது இளமைப் பருவத்தை பண்டை வினையாவது சஞ்சிதவினை, அநாதியே பற்றிய பாசம் எனினும் அமையும். பாசவே ரறுத்த பழம்பொருளே என்றார். பிறரும் பாசத்தோடு பட்டு நிற்றலும் பாசம் அகல பதியோடு ஒன்றி நிற்றலும் அல்லது தனித்து நிற்கும் ஆற்றல் உடையதன்று ஆன்மா ஆதலால், வினைப்பற்று அறுத்தவுடனே உனதடியைப் பிடித்தேன் என்றார். நெடுங்கடலைப் பெரும்பினை கொண்டன்றிக் கடத்தல் ஆகாதாகலின் பெரும்பிறவிக் கடல் கடக்க நினதடியினும் பெரிய புணை வேறில்லை என்றறிந்து பெரிய புணையா உனதடியை என்றும், பெரும்புணையைப் பற்றினோர்க்குக் கரை சேர்வது குறித்து ஐயமும் அச்சமும் உளவாகா ஆதலால் தாம் விரும்பியவாறு முத்திக்கரை சேர்வதில் துணிவும், அத்துணிவு பற்றி எழுந்த மகிழ்ச்சியும் தோன்ற முடித்தேன் உள்ளத்தெண்ணமெல்லாம் என்றும் கூறினார்.*

முன்னைப் பிறவி தவப்பயனே
முழுதும் அறியா மூடனிவன்
என்னக் கருத்தில் எண்ணியோ
யாதோ அறியேன் இரவுபகல்
கன்னற் பாகிற் கோற்றேனிற்
கனியிற் கனிந்த கவிபாட
அன்னத் தொகுதி வயற்கருவை
ஆண்டான் என்னை ஆண்டதுவே. 6

*பொருள்:* இரவினும், பகலினும் கருப்பஞ்சாற்றின் பாகைப்போலவும், கொம்புத் தேனைப் போலவும், முக்கனியைப் போலவும், சுவை கனிந்த பாடலைப் பாட அன்னக் கூட்டங்கள் வசிக்கும் வயல்சூழ்ந்த கருவா புரியாளி என்னை அடிமை கொண்டது. முற்பிறவியில் செய்த தவப்பயனே, சிறிதும் அறியாத மூடன் இவன் அதனால் இவனுக்கு அருள் செய்வோம் என்று திருவுள்ளத்தில் கருதியோ, யாது என காரணம் அறியேன்.

கவிபாடித் தன்னைத் துதிக்கும் உணர்வைக் கொடுத்துக் கருவாபுரியான் என்னை ஆண்டான் என்பதால் கவிபாடும் திறமும் முத்திப்பேறும் தனக்கு கிட்டியதைக் கூறினார். கவிபாடும் திறம் கல்வி அறிவால் சித்திப்பது. முத்திப்பேறு தவத்தால் சித்திப்பது. ஆனால் எந்த அறிவும் இல்லாத மூடனாகிய எனக்கு, இப்பிறவியில் நான் செய்த தவம் ஏதுமில்லை. இருந்தும் எனக்கு நீ இவ்விரண்டையும் தந்தது. முன்னைப் பிறவித் தவப்பயனோ? முழுதும் அறியாத மூடன் இவன் என்ற எண்ணத்தாலோ, நான் ஏதும் அறியேன் என்றார்.

பாகு காய்ச்சப்பெறுவது, அதுபோல் ஆராய்ச்சியால் வந்த அறிவு, தேன்-பல மலர்களில் இருந்து எடுத்து திரட்டி

வைக்கப்பெறுவது, அதுபோல் பல நூல்களைக் கற்றும் கேட்டும் வந்த அறிவு, கனி-கால முதிர்ச்சியால் முதிரப் பெறுவது, அதுபோல் அனுபவ முதிர்ச்சியால் வந்த அறிவு. இந்த மூன்றுவகை அறிவாலும் பிறந்த கவி பெரிதும் சுவையுடையதாம். அவ்வகைச் சுவைபெற்ற பாடல் என்பது தோன்றக் 'கன்னற் பாகிற் கோற்றேனிற் கனியிற் கனிந்த கவி' என்றார்.

பாலொடு கூடிய நீரைப் பிரித்துப் பாலை மட்டும் தன்னுள் கொள்ளும் அன்னம்போலப் பசுவோடு கூடிய பாசத்தை நீக்கிப் பசுவைத் தன்னடியில் சேர்க்கும் பதி என்பது தோன்ற 'அன்னத் தொகுதி வயற்கருவை ஆண்டான்' என்றார்.

*கன்னல்–கரும்பு, கோல்தேன்–கொம்புத்தேன், தொகுதி–கூட்டம்.*

**ஆண்ட குரவன் ஆவானை**
**அல்லற் பிறவி அறுப்பானை**
**வேண்டும் பதவி தருவானை**
**வெளிவீட் டின்பம் அளிப்பானைத்**
**தூண்டல் செய்யா மணிவிளக்கைத்**
**தொழில்மூன் றியற்றும் தொல்லோனைக்**
**காண்டற்கு அரிய பேரொளியைக்**
**களாவின் நிழற்கீழ்க் கண்டேன். 7**

*பொருள்:* அருட்கண்ணால் அடிமை கொண்ட ஞான ஆசாரியனாய் உள்ளவனை, துன்பம் தரக்கூடிய பிறப்பினை வேரொடு அறுக்கின்றவனை, அடியார்கள் வேண்டுகின்ற பதவிகளைத் தருகின்றவனை, மோட்ச இன்பத்தைத் தருகின்றவனை, தூண்டாத மாணிக்க தீபத்தை, படைத்தல் முதலிய மூன்று தொழிலையும்

செய்யும் பழையோனை, காணுதற்கு அரிய பெரிய ஒளிப்பிழம்பாய் உள்ளவனை, களாவின் நிழலின் கீழ்த் தரிசித்தேன்.

சிவபெருமானே குரு உருவாய் எழுந்தருளிப் பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்செய்வான் என்பது நூல் துணிபு ஆகலின் ஆண்ட குரவனாவானை என்றார். மான்காட்டி மானை ஈர்க்கும் கொள்கையென அருள் மௌன குருவாய் வந்து என்னும் தாயுமான சுவாமிகளின் திருவாக்கினையும் காண்க. ஆட்கொள்ளுதலால் ஆம் பயன் பிறவியறுதல், பிறவியறுதலால் ஆம் பயன் சாலோக முதலிய பதவிகளைப் பெறுதல். அதற்கும் மேற்பட்டது வெளிவீட்டின் இன்பமான முத்திநிலை என்பதனை உணர்க. தொழில் மூன்றாவன ஆக்கல், அழித்தல், அளித்தல், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே என்பார் மாணிக்கவாசகப் பெருமான். தொல்லோன்-ஆதியற்ற பழம் பொருளாய் இருப்பவன்.

*குருவன் - குரு, அல்லல்-துன்பம், தூண்டல் செய்யா-தூண்டா தொல்-பழைய.*

**கண்ட கண்கள் புனல்பாயக்**
**களிப்பாய் உள்ளம் கரையழிய**
**விண்ட மொழியின் நாக்குழற**
**விம்மி மேனி மயிர்பொடிப்பப்**
**பண்டை வசம்போய்ப் பரவசமாய்ப்**
**பரமா னந்தத் தெளிநறவம்**
**உண்டு தெவிட்டா அருள்புரிந்தான்**
**கருவை வாழும் உரவோனே. 8**

***பொருள்:*** தரிசித்த கண்கள் ஆனந்த புஷ்பஞ் சிந்தவும், ஆனந்தக் களிப்பில் அழுந்தி மனம் வரம்பு

இகந்து ஓடவும், துதிக்கும் மொழியொடு நாத்தடுமாறவும், மேனி பூரித்துப் புளகரும்பவும், முன்னுள்ள தன் வசம் போய்ப் பரவசப்பட்டுச் சிவானந்தமாகிய தெளிந்த நறவினை வாய்மடுத்துத் தெவிட்டாது இருக்க திருக் கருவையில் வாழும் ஞானமூர்த்தி திருவருள் செய்தான்.

கண்களில் நீர் சுரத்தலும், மனம் கரை கடந்த மகிழ்ச்சியடைதலும், நாக்குழறுதலும், மெய்சிலிர்த்தலும், தன்வசம் அழிதலும் கள் உண்டவர்க்கும் பக்தி மிகுந்தவர்க்கும் ஒப்ப நிகழும் குறிகளாகத் திகழ்வதை உணர்க. மற்றும் கள்ளால் வரும் இன்பம் சிற்றின்பம் மயக்கந்தருவது, தெவிட்டக்கூடியது. ஆனால் பக்தியால் வரும் இன்பமோ பேரின்பம் தெளிவைத் தருவது தெவிட்டாதது ஆனது பற்றிப் "பரமானந்தத் தெளிநறவம் உண்டு தெவிட்டா அருள் புரிந்தான்" என்றார்.

*புனல்-நீர், விள்ளுதல்-சொல்லுதல், பண்டை-பழைய, நறவம்-தேன், கள், உரம்-ஞானம்.*

உரகா பரணத் திருமார்பும்
உமைஒப் பனையாள் இடப்புறமும்
சிரமா லிகையும் புரிசடையும்
செய்ய வாயும் கறைமிடறும்
வரதா பயமும் மழுமானும்
வயங்கு கரமும் மலரடியும்
கருவா புரியான் வெளிப்படுத்திக்
காட்சி கொடுத்து நின்றானே. 9

*பொருள்:* சர்ப்ப ஆபரணத்தை அணிந்த திருமார்பும், உமையம்மையாகிய ஒப்பனாம்பிகையின் இடப்பாகமும், பிரம கபாலங்களால் தொடுத்த மாலையும், புரியை ஒத்த சடையும், சிவந்த வாயும்,

நீலகண்டமும், வரமும் அபயம் அளிக்கும் சின்னமும், மழுவும் மானும் விளங்கும் திருக்கரங்களும், தாமரை மலர் போன்ற திருவடியும் ஆகிய இவற்றோடு திருக் கருவையில் எழுந்தருளிய இறைவன், காட்சி கொடுத்து நின்று அருளினான்.

இதில் ஞானமே திருவுருவான சிவபெருமான் தமக்கு அருள்புரிந்ததைக் கூறினார். அவ்வருளே சக்தியாகப் பாகத்தே அமரநின்ற உமாமகேஸ்வரத் திருக்கோலத்தின் சிறப்பை இங்கு கூறினார்.

வரதாஸ்தம் கீழமைந்த திருக்கரம், அது அடியார்கள் வேண்டியதை அருளுவது. அபயாஸ்தம் மேலெடுத்த திருக்கரம் அது சரணம் அடைந்தவரை அஞ்சலீர் என்று அருளுவது. மழுவேந்திய திருக்கரம் வலக்கரம், மான் ஏந்திய திருக்கரம் இடக்கரம். உரக ஆபரணம்-உரகா பரணம், வரத அபயம்-வரதாபயம்.

*உரகம்-பாம்பு, ஒப்பனை-அலங்காரம், இது இயற்கை அலங்கார சொரூபியான உமையம்மைக்குப் பெயராயிற்று. சிரமாலிகை-தலை மாலை, மாலிகா எனும் வடசொல் மாலிகை எனத் தற்பவமாயிற்று.*

நின்ற நிலையும் செய்தொழிலும்
நினைத்த குறியும் வழிபாடும்
ஒன்று பதமும் பதுங்கடந்த
உண்மைப் பொருளும் அறியேனை
இன்றும் அடியா ருடன்கூட
எண்ணம் புரிந்த இனியஅருள்
நன்று நன்று தமிழ்கருவை
நம்பா உம்பர் நாயகனே. 10

*பொருள்:* செந்தமிழ் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளியுள்ள இறைவனே! தேவர்களுக்குத் தலைவனே! நான் நிற்கின்ற நிலை இன்னது என்பதையும், நான் செய்கின்ற செயல்களையும், அந்தச் செயல்களில் நின்று கருதும் மூர்த்திகளையும், அம்மூர்த்திகளுக்குச் செய்யும் வழிபாட்டையும், அவ்வழிபாட்டால் கைகூடும் பதவிகளையும், அப்பதவிகளைக் கடந்து நின்ற முத்தி யையும் சிறிதும் அறியாத என்னை இப்போது உன் அடியாரோடு கூடி வாழத் தேவரீர் திருவுளத்து எண்ணம் கொண்டருளிய திருவருள் நன்றாய் இருந்தது. நன்றாய் இருந்தது.

நின்று நினைத்த என்பன, நிற்கின்ற நினைக்கும் எனப் பொருள்பட்டு, முறையே நிகழ் காலத்தையும் எதிர்காலத்தையும் காட்டின.

*குறி-மூர்த்தம், ஒன்று பதம்-பொருந்தும் பதம், எண்ணம் புரிந்த-எண்ணிய, நம்பன்-இறைவன், உம்பர்-உவ்வுலகம்-வானுலகம், இது இடவாகுபெயராய் வான் உலகத்துள்ள தேவரைக் குறித்தது. திருச்சிற்றம்பலக் கோவையில் உம்பராரறிய மறையோன் என்றார்.*

## இரண்டாம் பத்து

**இரண்டாம் சீரும் நான்காம் சீரும் இறுதிச் சீரும் மாச்சீர்களாகவும் மற்றை விளச்சீர்களாகவும் வந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்**

நாயகன் முகுந்தன் சததளப்பொகுட்டில்
நான்முகன் என்னவீற் றிருக்குந்
தூயவன் கருவைக் களாநிழல் அமர்ந்தோன்
துணையடிப் புகழினை வழுத்தி
மாயிறு ஞாலம் எடுத்தேத்த
வரம்பெறு மதுரநா வலர்கள்
சேயிரு விசும்பிற் கற்பக நீழற்
செல்வமும் வேண்டுவ திலையே. 11

***பொருள்:*** இறைவன் ஆகிய உருத்திரனும், திருமாலும் நூறு தளங்களை உடைய தாமரை பொகுட்டில் வசிக்கும் பிரமனும் என்று கூற நிகரின்றி இருக்கும் விசுத்த தேகம் உடையவனாகிய திருக்களா நிழலின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறைவனுடைய இரண்டு திருவடிகளின் புகழ்ச்சியினைக் கூறிப் பெரிய நிலவுலகில் உள்ளோர் பெரிதும் புகழ வரம்பெற்ற இனிய கவிதொடுக்கும் நாவல்லோர். மிகவும் உயர்ந்த விண்ணுலகில் கற்பக நிழலில் வசிக்கும் இந்திர செல்வத்தையும் வேண்டார்.

சதம் என்பது ஈண்டு என் மிகுதியை உணர்த்தியது. இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை உயிர்வழி வவ்வும் உடம்படு மெய்யாதலே பொது விதியாயினும், மா என்பது உரிச்சொல் ஆதலால் இடையுரி வடசொல்லின் இயம்பிய கொளாதவும் என்னும் புறநடையால் மாயிரு ஞாலம் என யகர உடம்படு மெய் பெற்றது.

*நாயகன்-இறைவன், தலைவன். முகுந்தன்-திருமால், சததளப் பொகுட்டு-நூறு இதழ்களை உடைய தாமரை மலர்ப்பொகுட்டு, சதம்-நூறு, தளம்-இதழ், தாமரை மலர் என்பது குறிப்பெச்சம். தூயவன்-பரிசுத்தன். துணை-இரண்டு, வழுத்து-துதித்து, மாஇரும்-மிகவும் பெரிய, ஞாலம்-பூமி, சேய்இரு-மிகவும் உயர்ந்த, விசும்பு-வான் உலகு.*

வேண்டுவ தொன்று தமியன் எப்பிறப்பும்
வெந்தழல் நரகிடை விழினும்
காண்டகு சிறப்பின் அரம்பையர் சூழக்
கற்பக நீழல் வைகிடினும்
தூண்டரு சுடரே களாநிழல் அமர்ந்த
சோதியே கருவைநா யகனே
ஆண்டகாய் நினது திருவடிக் கமலத்து
அன்பெனும் அழிவிலாப் பொருளே. 12

***பொருள்:*** தீபம் போல நின்று மல இருளைப் போக்கும் தூண்டாத விளக்கே, களாமரத்தின் கீழ் எழுந்தருளிய ஞான ஒளியே, திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே. ஆண் தன்மையில் சிறந்தவனே, ஒரு பற்றுக்கோடும் இல்லாத அடியேன் உன்னிடம் வேண்டுவது ஒன்றுள்ளது அது என்னவென்றால், எப்பிறவி எடுத்தாலும், கொடிய தீயமைந்த நரகத்தில் விழுந்தாலும், கண்டு மகிழத்தக்க சிறப்பு வாய்ந்த தெய்வப் பெண்கள் சூழ்ந்து நிற்கக் கற்பக நிழலின் கீழ் இருந்தாலும், உன் திருவடித் தாமரையின் கீழ் வைக்கும் அன்பு என்று சொல்லப்பட்ட அழிவில்லாத பொருளே ஆகும்.

நின் திருவடிக்கு அன்பு பூண்டிருத்தலே பேரின்பம் ஆதலால் வான்புகினும் சரியே. நரகம் புகினும் சரியே, யான் வேண்டுவது அன்பே என்றார்.

காண்+தகு=காண்டகு. ஆண்+தகாய்=ஆண்டகாய், தூண்+தகு=தூண்டகு. தூண்டகு சுடரே என்பதும் பாடம். இதற்கு ஸ்தம்ப வடிவமான பேரொளிப் பிழம்பே எனப் பொருள் கொள்க. தூண்டாிய சுடராவது தூண்ட வேண்டாது ஒளி வீசும் விளக்கு அதாவது தூண்டாத தீபம். இது மாணிக்கத்தைக் குறிக்கும்.

*வெம்தழல்-கொடிய நெருப்பு, காண்தகு-காணத் தகுந்த சிறப்பு வாய்ந்த, ஆண்தகாய்-ஆண்டருளும் பெருமை வாய்ந்தவனே. தகை-பெருமை.*

அழிவிலாப் பொருளே பழமறைக் கொழுந்தே
அலையெறி அமுதவா ரிதியே
ஒழிவிலா தருளுங் கற்பகக் கனியே
ஒப்பனை மைப்பரந் தெறிக்கும்

**விழியினா லுருக ஒருபுறம் அளித்த**
**விமலனே கருவையம் பரனே**
**இழிவிலாப் புணையாம் பிறவியங் கடனின்று**
**ஏறநாண் பெற்றதுன் பதமே. 13**

*பொருள்:* எக்காலத்தினும் அழிவில்லாத பொருளாய் உள்ளவனே. தொன்று தொட்டுள்ள வேதம் விளங்குதற்கு முதல் காரணமான கொழுந்தே, அருளாகிய அலைவீசும் அமுத சாகரமே, தன்னைச் சரணடைந் தோர்க்கு ஓய்வு இன்றி தந்து அருளும் கற்பகக்கனியே. ஒப்பனை எனப்படும் உமையாளின் மைபரவி ஒளிவீசும் கடைக்கண் பார்வையால் திருவுளமுருகவாம் பாகத்தை அளித்தருளிய விமலனே, திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, பிறவிப் பெருங்கடலிலிருந்து நான் கரையேற அடியேன் பெற்ற தெப்பமாவது, உன் திருவடியே ஆகும். சிவபெருமானையே பொருளாக உடையது வேத மாதலால் மறைக்கொழுந்து என்றார். கொழுந்தானது இலையாய் விரிவது போல் சிவபெருமானே வேதமாக விரிந்தார் என்பது கருத்தாகும். மேலும் வேதம் என்னும் வித்தின் முளைத்த கொழுந்து என்று பொருள் கூறுவாரும் உண்டு. கடல் தன்னிடம் அகப்பட்ட பொருள்களை அலையால் மொத்தி மொத்திக் கரைசேர்த்தல் போல, ஆன்ம கோடிகளைத் தம் அருட்பெருக்கால் பிறவியில் புகுத்திப் பேரின்பக் கரை சேர்ப்பவர் என்பதால் சிவபெருமானை அலையெறி அமுதவாரிதியே என்றார்.

*மறை-வேதம், வாரிதி-கடல், விமலன்-இயல்பாகவே மல பந்தங் களிலிருந்து நீங்கியவன், இழிவு இலா-தாழ்வு இல்லாத, சிறந்த, புணை-தெப்பம்.*

உன்பத மேத்தித் துன்பவே ரறுக்க
உலகினிற் திருவுடன் வாழும்
மன்பதைக் கெல்லாம் எய்திடுந் தரமோ
வலியவந் தெனைத்தடுத் தாண்டுள்
அன்புவந் தொருவ ரறிந்திடா அறிவும்
அறிவுறுத் தருளினை அதற்கு
முன்பெது புரிந்தேன் கருவையம் பதிவாழ்
முதல்வனே முக்கண்வா னவனே. 14

*பொருள்:* திருக்கருவை என்கிற திருப்பதியில் வாழ்கின்ற முதல்வனே. மூன்று கண்களை உடைய தேவர் திருவடியைத் துதித்துத் துன்பத்தினை வேருடன் அறுக்க உலகில் செல்வச் செழிப்புடன் வாழும் மக்களும் வாய்க்குந் தரமோ? அம்மக்களில் ஒருவனாகிய என்னை, வலிய வந்து தடுத்து அடிமை கொண்டு உன் உள்ளத்தினில் அன்பு கொண்டு மகிழ்ந்து ஒருவர் அறியவொண்ணா பேரறிவினையும் அறிவுறுத்தி அருளினாய். அச்செயலுக்கு முற்பிறப்பில் என்ன செய்தேன் நான் அறியேன்.

செல்வம் ஆன்மாவை ஆணவ அந்தகாரத்துள் அழுத்தி அதன் காரணமாகத் தோன்றும் அறியாத பற்றுக்கோடாக பலவகைத் துன்பங்களையும் தரும் என்பதை திருவுடன் வாழும் மன்பதைக் கெல்லாம் துன்ப வேரறுக்க எய்திடுந் தரமோ என்றார். துன்ப வேராவது அறியாமை அறியாமையை அறுக்கவல்லது அறிவே ஆதலால் அறிவும் அறிவுறுத்தருளினை என்றார்

*திரு-செல்வம், மன்பதை-மக்கட்பரப்பு.*

வான்எரி அறல்கால் மண்ணனப் பகுக்க
வரும்பெரும் பூதமோர் ஐந்தும்
ஆனமுக் குணமும் கரணமோர் நான்கும்
அனைத்துமாய் ஆதிஈ றின்றி

**ஊனுரை உடலுக்கு உயிருமாய் உயிருக்கு**
**உணர்வுமாய் ஒன்றினும் தோயா**
**ஞானநா யகனே கருவையம் பரனே**
**நானறிந்து உரைக்குமாறு எவனோ. 15**

***பொருள்:*** ஆகாயம் எனவும், தீ எனவும், நீர் எனவும், காற்று எனவும், மண் எனவும் பகுக்கப்பெற்று வரா நின்ற பெரிய பூதங்கள் ஐந்தும் அமைந்த முக்குணங்களும் அந்தக் கரணங்கள் நான்கும் இவை முதலிய யாவுமாய், தனக்கொரு முதலும், ஈறுமில்லாமல், தசையில் நிலை பெற்ற உடம்பிற்கு ஒரு உயிருமாய், அவ்வுயிருக்கோர் உணர்ச்சியாய் ஒன்றினும் தோய்வின்றி நின்ற ஞான வடிவாகிய இறைவனே, திருக்கருவையில் எழுந்தருளி யிருக்கின்ற பெருமானே, நான் உன்னை உணர்ந்து துதிக்கும் வகை எவ்வாறு அறியேன்.

உலகம், உடல், உயிர், குணம், உணர்வு முதலிய அனைத்தும் தானேயாகியும் தான் அவற்றிற்கு வேறாகி நிற்கும் இறைவனது இயல்பு தோன்ற அனைத்துமாய் என்றும், ஒன்றினும் தோயா என்றும் கூறினார். எல்லாமா யல்லவுமாய் என்றார் பிறரும், ஒரு பொருள் பிறிது ஒன்றனோடு ஒன்று கலந்திருக்கும். அன்றேல் பிரிந்திருக்கும்.

*அறல்-நீர், கால்-காற்று, கரணம் நான்கு அவை-மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஈறு-முடிவு.*

**எவன்உயிர்க் குயிராய் எள்ளுமெண் ணெயும்போல்**
**எங்கணும் இடையறா நின்றான்**
**எவன்அனைத் துலகும் ஈன்றுகாத் தழிக்க**
**இறைமைசால் மூவுரு வெடுத்தோன்**

எவன்முத லிடையீ றின்றிஎஞ் ஞான்றும்
ஈறிலா மறைமுடி யிருப்பான்
அவன்எனைப் புரக்கத் திருக்களா நீழல்
அமர்ந்தருள் புரிந்தகா ரணனே. 16

*பொருள்:* உயிர்களுக்கு ஒருயிராய் எள்ளும் அவ்வெள்ளில் நிறைந்த எண்ணெயும் போல எல்லா இடத்தும் இடையறாமல் நின்றவன் எவன். அனைத்துல கையும் படைத்து அளித்து அழிக்கத் தலைமை அமைந்த மூன்று திரு உருவங்களையும் கொண்டு அருளினவன் எவன் முதலும், இடையும், முடிவும் இல்லாமல் எந்நாளும் அழிவில்லாத வேதத்தின் உச்சியில் இருப்பவன் எவன், அவனே என்னைப் பாதுகாக்க அழகிய களாநிழலில் அமர்ந்து அருள்செய்த காரணன் ஆவான்.

காரணம், முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என்று மூன்று வகைப்படும். முதற்காரணம் தானே காரியமாவது, மண்ணாலான குடம் என்பதில் மண்போல துணைக்காரணம் முதற்காரணம் காரியப்படு மளவும் உடனிருந்து பின் நீங்குவது. திகிரியாலான குடம் என்பதில் திகிரி போல நிமித்த காரணம் முதற்காரணம் துணைக்காரணங்களைக் கொண்டு காரியத்தைச் செய்யும் கருத்தா குயவனால் ஆன குடம் என்பதில் குயவன் போல-இவற்றுள் ஈண்டு சுட்டப்பட்ட காரணம் நிமித்த காரணம், பிரணவ சொரூபனாதலால் மறைமுடி யிருப்பான் என்றார்

*இறைமை-தலைமை, காரணன்-காரணமானவன், புரக்க-காப்பாற்ற.*

காரணம் ஏதென் றறிகிலேன் தமியேன்
கற்றல மனத்தினைக் கரைத்து
வாரணி முலையாள் ஒப்பனை யோடு
மழவிடை மேலெழுந் தருளி
நாரணன் அறியாத் திருவுருக் காட்டி
நல்லருள் சுரந்துவாழ் வித்தான்
பூரணன் கருவைக் களாநிழல் அமர்ந்த
புண்ணியன் விண்ணவர்க் கிறையே. 17

*பொருள்:* எங்கும் நிறைந்திருப்பவனும், திருக் கருவையில் களா மரத்தின் நிழலில் எழுந்தருளிய புண்ணியனும், அயன் முதலிய தேவர்களுக்கு இறைவனு மாகிய பெருமான், தனியேனது கற்பாறை மனத்தை இளகச் செய்து, கச்சணிந்த தனத்தை உடைய உமையம்மையோடு, இளமை தங்கிய இடப வாகனத்தின் மேல் எழுந்தருளி திருமாலால் அறியப்படாத திரு உருவத்தைக் காட்டி நல்ல திருவருள் செய்து வாழ்வித்தனன். அதற்குக் காரணமாகக் கூடிய என்னிடம் உள்ள சிறந்த குணம் எதுவென்று நான் அறியவில்லை. இறைவனின் திரு அருள்பெருக்கே இதற்கு காரணம் என்பது கருத்து.

*அறிகிலேன்-அறியும் ஆற்றல் இலேன், கல்தலம்-கல்லிடம்,-கற்பாறை, வார்-கச்சு, மழ-இள, விடை-ரிஷபம், பூரணம்-நிறைவு, விண்ணவர்-தேவர்.*

விண்ணவர் மகுட கோடிவீழ்த் திறைஞ்சும்
விரைமலர்ச் சேவடி மிசையே
உண்ணிறை காத லன்புநின் றுருக
உலையிடு மெழுகென உருகிக்

கண்ணில்நீர் வாரக் கருவையம் பரனே
கடவுளே என்றெடுத் தேத்தப்
புண்ணியம் புரிந்தேன் இப்பெரும் பேறு
பூதலத் தெவர்பெறு வாரே. 18

*பொருள்:* மகுடங்கள் அணிந்த அளவிறந்த தேவர்கள் வீழ்ந்து வணங்கும் மணம் மிக்க தாமரை மலரினை ஒத்த செவ்விய திருவடிகளின் மேல், என் உள்ளமானது நிறைந்த ஆசையோடும் அன்போடும் நிலைபெற்று இளகக் கொல்லர் உலையில் வைத்த மெழுகைப் போல உருகிக் கண்களிலிருந்து ஆனந்த புஷ்பஞ் சிந்தவும், திருக்கருவையில் எழுந்தருளிய பெருமானே, எல்லாப் பொருள்களையும் கடந்து நின்றவனே, என்று என் நாத்துதிக்கவும் புண்ணியஞ் செய்தேன். இத்தகு பெரிய செல்வத்தினை இந்நிலவுலகில் அடைபவர் வேறு யார் உளர்.

*மகுடம்-கிரீடம், இறைஞ்சும்-வணங்கும், விரை-வாசனை, சேஅடி-செவ்விய அடி, மிசை-மேல், பேறு-செல்வம்.*

பெறுவது நினது திருவடிக் கமலம்
பேசுவ துன்திரு நாமம்
உறுவது நினது திருவுரு வெளியாம்
உணர்யாங்கன் அருள் அலாதுண்டோ
மறுவறு சிறப்பின் மாசிலா மணியே
வரதனே சிவ பெருமானே
குறுமணி பரவக் களாநிழ லமர்ந்த
கொடிமதிற் கருவையா திபனே! 19

*பொருள்:* குற்றமற்ற சிறப்பினை உடைய கழுவிய மாணிக்கம் போன்றவனே. அடியவர்களுக்கு வேண்டும் வரத்தை அளிப்பவனே, சிவபிரானே, அகத்திய முனிவர் வணங்கக் கொடி கட்டிய மதில் சூழ்ந்த திருக்கருவைப்

பதியில் திருக்களா நிழலின் கீழ் எழுந்தருளியுள்ள இறைவனே, அடியேன் பெறுவது உன் திருவடி ஆகிய தாமரையே ஆகும். நான் புகழ்ந்து பேசுவது உன் திருநாமத்தையே, என் பிறவியின் முடிவில் அடைவது உன் திருவுருமாகிய சிதாகாசத்தையே, நான் அறிவது உன் திருவருளையே இதுவல்லாமல் பெறுவது வேறுண்டோ? குற்றமற்ற மணி சிறப்புடையது ஆயினும் துளைக்கப் படுதல் முதலிய குறைகள் அதற்கு உண்டாதலின் அவ்வகைக் குறைகள் அற்ற சிறப்புடைய மணி என்பதற்காக மறுவறு சிறப்பின் மாசிலாமணியே என்றார்.

*கமலம்-தாமரை, உறுவது-பொருந்துவது, மறுவறு-குற்றம் இல்லாத, பரவ-வணங்க, ஆதியன்-தலைவன்.*

**ஆதவன் மதிபார் அனல்வெளி புனல்கால்**
**அருமறை எச்சனென் றெட்டுப்**
**பேதமாய் உருவாய் அருவமாய் நிறைந்த**
**பெற்றியால் உற்றுநான் உன்னை**
**ஏதினால் உணர்வேன் உணருமா றருளாய்**
**இளநிலாப் பசுங்கொழுந் தணிந்த**
**சோதியே கருவை ஒப்பனை களபத்**
**துணைமுலை தழுவுகா தலனே. 20**

*பொருள்:* குளிர்ச்சி மிக்க இளம் சந்திரனைத் தலையில் அணிந்த ஒளிவடிவாய் உள்ளவனே, திருக்கருவைப்பதியில் எழுந்தருளிய, உம்மையின் வாசனைச் சாந்தை பணிந்த இரு தனங்களையும் தழுவும் அன்புடையவனே, சூரியனும், சந்திரனும், பிரித்வியும், தேயுவும், ஆகாயமும், அப்புவும், வாயுவும், அரிய வேதங்கள் கூறும் ஆன்மாவும் என்று சொல்லிப் பெற்ற எட்டுவகைப் பட்ட திருஉருவமாகியும் அருவமாகியும் நீ நிறைந்துள்ள தன்மையால் நான் எந்த வடிவில் மனம் பொருந்தி உன்னை அறிந்து வணங்கினேன்? அறிந்து உய்யும் வண்ணம் அருள் செய்வாயாக.

*இந்திரியம் முதலிய தத்துவங்கள் யாவும் கழிய எஞ்சி நிற்பது ஆன்மா ஆதலால் எச்சன் எனப்பட்டது.*

***ஆதவன்-சூரியன், மதி-சந்திரன், பார்-பூமி, வெளி-ஆகாயம், எச்சன்-ஆன்மா, களபம்-வாசனை.***

## மூன்றாம் பத்து

**முதற்சீர் மாச்சீராகவும் கடைச்சீர் காய்ச்சீராகவும் இடைச்சீர் நான்கும் விளச்சீர்களாகவும் வந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**காத லூற்றிட மனநிலை பெற்றிடக்**
**கனிந்திடக் களிகூரப்**
**போத முற்றிட யான்என தென்றிடும்**
**புலைச்செருக் கறமாற**
**நாதன் முத்தமிழ்க் கருவையம் பரன்என**
**நாத்தழும் புறஓதி**
**ஓதி மற்றுநான் பெற்றதை இற்றென**
**உரைத்திட முடியாதே. 21**

***பொருள்:*** *உன் திருவடியின் மீது ஆசை மீதூரவும், அதனால் என் மனம் அருள் நிலையில் நிற்கவும், அதன் பொருட்டு மனம் கனியவும், அக்கனிவினால் ஆனந்தக் களிப்பு மிகவும், அக்களிப்பினால் சிவஞானம் முற்றவும், அந்த முதிர்ச்சியால் நான் எனது என்று அகங்காரம் கொள்ளக்கூடிய பொல்லாத மயக்கம் அகலவும் இறைவனே, இயல், இசை, நாடகம் என முத்தமிழ் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் பரனே, என்று நாத்தழும்புறத் துதித்துத் துதித்து, நான் பெற்ற பேற்றை இத்தகைய தன்மையது என்று எடுத்துக் கூற இயலாது.*

ஆசையாவது பற்றுகொண்ட உள்ளம், நிலையான பொருளைப் பற்றுவது தானும் நிலை பெறுமாதலால் காதலுற்றிட மனநிலை பெற்றிட என்றும், திருவருட் கிலக்காகி நிலைபெற்ற மனம் சூரிய வெப்பத்திற்கு இலக்கான மெழுகுபோல் கரைதல் இயல்பாதலால் கனிந்திட என்றும், உறைத்து நின்றபடி நெகிழ்ந்து விரிதலே இன்பத்திற்கு ஏதுவாக இருத்தலின் களிகூர என்றும் இன்ப அனுபவத்தால் தோன்றும் ஞானத்தில் தெளிவு பிறத்தலால் போத முற்றிட என்றும், ஞான விளக்கமாகவே அதன் காரணமாக ஏற்பட்ட நான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் கொண்டு எழுந்த ஆணவ மயக்கம் அகலுதலால் புலைச் செருக்கறமாற என்றும் கூறினார்.

*காதல்-ஆசை, போதம்-அறிவு, புலை-பொல்லாங்கு, செருக்கு-ஆணவ மயக்கம், அறமாற-முழுவதும் அகல, இற்று என-இப்படிப் பட்டது என.*

முடிக டந்தது ககனகோ ளகையொடு
முகட்டினுக் கப்பாலும்
அடிக டந்தது பாதலம் ஏழினுக்
கப்புறத்து அனலோடும்
துடிகள் தந்தகை கடந்தன திகந்தமால்
தொல்புகழ்க் களாவீசன்
பொடிகள் தந்தபால் மேனியன் திருநடம்
புகலுதற் கெளிதாமோ. 22

*பொருள்:* மேகத்தால் சூழப்பட்ட அண்ட கோளத்தின் நெடிய சிகரத்திற்கு அப்புறத்தும் திருமுடி கடந்த பாதாள உலகம் ஏழினுக்கு அப்பாலும் திருவடி சென்றது, திசை முடிவில் அக்கினியும் உடுக்கையும் ஏந்தி

திருக்கரங்கள் சென்றன. தொன்று தொட்டு புகழ்வாய்ந்த திருக்களாவில் எழுந்தருளியிருக்கும் ஈசனும், திருநீற்றை அணிவதால் வெள்ளிய திருமேனியினை எடுத்துக் கூறுதல் எளிதாகுமோ?

இச்செய்யுள் சிவபெருமானின் திருநடனச் சிறப்பைக் கூறுவது இத்திருக்கோல நடனத்தால் நிகழ்வன வாதலின் அந்நடனச் சிறப்பு சொல்லுக்கடங்கா அருமையுடையது என்பார். திருநடம் புகலுதற் கெளிதாமோ என்றார்.

*ககனம்-ஆகாயம், கோளகம்-அண்டகோளம், முகடு-உச்சி, அனல்-அக்கினி, துடி-உடுக்கை, திகந்தம்-திக்கு, அந்தம்-திசை முடிவு, ஆல்-அசை, பொடி-நீறு.*

**எளியன் புன்தொழிற் பாதகன் மாதராய்**
**இளமுலை வளம்வேட்ட**
**களியன் தீக்குண வஞ்சகன் நெஞ்செனும்**
**கருங்கலைக் கரைவித்து**
**வெளியில் வந்துநின் பொன்னடி சென்னியின்**
**மிலைந்துஎனை ஆட்கொண்ட**
**அளிக ளிந்தநின் அருட்குணம் உரைப்பதார்**
**அருங்களா அமர்ந்தோனே. 23**

*பொருள்:* அரிய களாமரத்தின் நிழலில் எழுந் தருளிய இறைவனே. ஏழ்மை உடையவனும், புல்லிய தொழிலே செய்யும் பாதகனும், பெண்களின் இளமை வாய்ந்த தனபோகத்தை விரும்பும் மயக்கமுடையவனும், கொடிய வஞ்சக குணமும் உடைய என் மனமென்னும் கருங்கல்லைக் கரையச்செய்து வெளிப்பட்டு வந்து, பொன் போன்ற உன் திருவடிக் கமலங்களை என் தலையில் சூட்டி, என்னை அடிமை கொண்ட உன்

திருவருள் குணத்தை எடுத்துச் சொல்வதற்கு யார் உள்ளார்?

சிற்றறிவும் சிறுதொழிலும் உடைமை பற்றி எளியன் என்றார். காமம் கள்ளினும் மகிழச் செய்யும் என்பதால் களியன் என்றார்.

*புன் தொழில்-அற்பத்தொழில், மாதரார்-விருப்பத்திற்கு இடமானவர், வேட்ட-விரும்பிய, களியன்-கள்ளுண்டவன்-மயக்க முடையவன், மிலைந்து-சூட்டி, அளி-இரக்கம்.*

**அமரர் மாதவர் முனிவர் திரண்டுநின்று**
**அனுதினம் தொழுதேத்தும்**
**தமர நூபுரப் பொற்சரண் ஏத்திடத்**
**தமியனுக்கு அருள்செய்தான்**
**குமர னால்அருஞ் சூர்ப்பகை தடிந்தவன்**
**கொள்ளைவண் டினம்ஆர்க்கும்**
**கமல வாவியும் பொங்கரும் சூழ்திருக்**
**கருவைஎம் பெருமானே. 24**

*பொருள்:* தன்னுடைய இளைய மகன் முருகனைக் கொண்டு வெல்லுதற்கு அரிய சூரபதுமனை வென்று வேரொடு அறுத்தவனும், தேனை கொள்ளை கொள்ள வண்டுகள் ஒலிக்கும் ஓசைகளையுடைய தாமரைத் தடாகங்களும், சோலைகளும் சூழ்ந்த திருக்கருவைப் பதிதனில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானாகிய இறைவன், பெரும் தவத்தினை உடையவர்களும், தேவர்களும், முனி சிரேஷ்டர்களும் கூடி நின்று எப்பொழுதும் துதித்து வணங்கும் பேரொளி வாய்ந்த சிலம்பினை அணிந்த பொன்போன்ற அரிய திருவடிகளைத் துதிக்க தனியேனாகிய எனக்கும் அருள் செய்தான். அமரர் முதலியோரால் வணங்கப்படும் திருவடியின் பெருமை தோன்றப் பொற்சரண் என்றார்.

*அமரர்-தேவர், மாதவர்-தவத்தில் மிகுந்த மக்கள், முனிவரர்- தேவர் படைக்கப்பெறும் முன்னர் பிரமனால் படைக்கப்பட்டவர், தமரம்-பேரொலி, நூபுரம்-சிலம்பு, சூர்-சூரபதுமன் , தடிந்தவன்-கொன்றவன், ஆர்க்கும்-சப்திக்கும், பொங்கர்-சோலை.*

கருவை யம்பரன் அம்பர மேனியன்
கடவுளர் காணாத
உருவை அம்பிகை பெறப்பகுந் தளித்தவன்
ஒன்னலர் புரம்நீற்று
பெருவை அம்பெனக் கண்ணனை உடையன்என்
பிழைபொறுத் தழியாத
திருவை அம்புவிச் சிறப்பொடும் அளித்தவன்
திருக்களா உடையோனே. 25

*பொருள்:* திருக்கருவையினை இடமாகக் கொண்டு எழுந்தருளிய அழகிய பரமனும், சிதாகாசமே திருமேனியாக உடையவனும் தேவர்கள் காணாத தன் திருமேனியை உமையம்மை பெறப் பாகஞ் செய்து கொடுத்தவனும், பகைவரின் திரிபுரங்களை நீறுபடுத்தும் பெருமை வாய்ந்த கூரிய அம்பாகத் திருமாலை உடையவனும், என் பிழையினைப் பொறுத்து அழியாத செல்வமாகிய சிவஞானச் செல்வத்தை அழகிய நிலவுலகச் செல்வத்தோடு தந்தருளினவனும் ஆகிய இறைவனே இத்திருக்களா நிழலில் வீற்றிருக்கின்றான்.

கருவையை இடமாக உடைமை பற்றி அவனது சர்வ வியாபகத்தன்மை பழுது படுமாறிலலை என்பது விளங்க அம்பர மேனியன் என்றும், இடமும் மேனியும் கூறியதால் கண்டப்பொருள்போல் எளிதில் புலப்படும் தன்மையன் என்று கொள்ளற்க என்பார். கடவுளைக் காணாத உரு என்றும் கூறினார். ஒருவற்கு எவற்றினும் அருமை

யுடையது தன் உடம்பு அவ்வுடம்பை பகுந்தளித்த பெருங்கொடையாளி என்பது தொனிக்கக் கடவுளர் காணாத உருவைப் பகுந்தளித்தவன் என்றார். நண்ணினர்க்கு எளியவனும், நண்ணார்க்குச் சேயோனும் ஆதலால் ஒன்னலர் புரமெரித்த அவனே என் பிழை பொறுத்துத் திரு அளித்தான் என்றார். பிழையாவன கல்லாப்பிழையும், கருதாப்பிழையும் கசிந்துருகி நில்லாப் பிழையும் முதலாயின. அழியாத செல்வமாவது சிவஞானச் செல்வம் ஆகும். மற்றைய செல்வங்கள் அனைத்தும் அழிவுடைய செல்வங்களே. ஞானச் செல்வம் உடையவர்க்கு இம்மைச் செல்வங்கள் இலதாதலும், இம்மைச் செல்வங்கள் உடையவர்க்கு ஞானச்செல்வம் இலதாதலும் பெரும்பான்மையான உலக இயற்கை. அத்தகு இயற்கைக்கு மாறாக எனக்கு இருவகைச் செல்வங்களும் கொடுத்தான் என்பார். அழியாத திருவை அம்புவிச் சிறப்பொடும் அளித்தவன் என்றார்.

*உடையோன்-உடையவன், இறைவன், அம்பரம்-ஆகாயம், ஒன்னலர்-பகைவர், புரம்-முப்புரம், வை அம்பு-கூரிய அம்பு, கண்ணன்-கிருஷ்ணன், திரு-செல்வம், நீற்றல்-நீறாக்கல்-அழித்தல் நீற்று.*

உடையர் என்றுதும் மக்கலை மனைவியை
ஒக்கலைப் பெருவாழ்வை
அடைய நல்குசீர்ச் செழும்பொருள் முதலிய
அனைத்தையும் நினைப் பாரோ
விடையின் மேல்வரு திருக்களா நாயகன்
விரைமலர்ச் செழுங்கொன்றைத்
தொடையல் வேணியான் அடியவர்க் கன்பொடு
தொண்டுசெய் மனத்தாரே. 26

*பொருள்:* இடப ஊர்தியின் மேல் எழுந்தருளும் திருக்களா நிழலில் அமர்ந்து அருளிய இறைவனும், வாசனை மிகுந்த தளிர்த்த கொன்றை மலரால் தொடுத்த மாலையை அணிந்த சடாமுடியினை உடையவனுமாகிய சிவபெருமானது அடியார்களுக்கு அன்புடன் வழிபாடு செய்யும் மனத்தினை உடையவர். மக்களையும், மனையாட்டியையும், சுற்றத்தாரையும்; வளமை மிகுந்த வாழ்க்கையையும், சிறப்புக்கள் பலவற்றையும் ஒரு சேரத்தரும் செழித்த செல்வப்பொருள் முதலிய யாவற்றையும் உடையவர் என்று கருதுவரோ ?

*ஒக்கல்-சுற்றம், அடைய-ஒருசேர, நல்கும்-கொடுக்கும், தொடையல்-மாலை, வேணி-சடை.*

**மனத்தை யான்தினம் வணங்குவன் மின்னென**
**வைகலும் நிலையற்ற**
**தனத்தை வாழ்வினை நிலையென மதித்துழல்**
**ஆசையில் தளராதே**
**புனத்து ழாய்முகில் போற்றிடுங் கருவைவாழ்**
**புண்ணியன் பாலற்காச்**
**சினத்த காலனை உதைத்தவன் பங்கயச்**
**சேவடி வணங்கென்றே. 27**

*பொருள்:* மின்னலை போன்ற என்றும் நிலையற்ற பொருளினையும், வாழ்க்கையினையும் நிலையென்று கருதிச் சுழன்று திரியும் விருப்பத்தால் தளர்ச்சி அடையாமல் முல்லை நிலத்திற்குரிய துளபமலர் மாலை யணிந்த மேகம் போன்ற நிறம் உடைய திருமால் வணங்கும் திருக்கருவைப் பதியில் வாழும் புண்ணிய வடிவாய் உள்ளவனும், இளைஞரான மார்க்கண்டேய முனிவருக்காகக் கோபித்த எமனை உதைத்துவனுமாகிய இறைவனது தாமரை மலரினை ஒத்த செவ்விய

திருவடிகளை வணங்காயென்று, என் மனத்தை நான் நாள்தோறும் வணங்கிக் குறையிருப்பேன்.

*மின் என-மின்னலைப் போல, வைகலும்-நித்தமும், புனம்-சோலை, துழாய்-துளபம், முகில்-மேகம், பாலன்-குழந்தை, மார்க்கண்டர் பதினாறு வயதினராய்ச் சிவபெருமானை் அடைந்ததால் பாலன் எனப்பட்டார். சினத்த-கோபித்த , காலன்-யமன், பங்கயம்-தாமரை.*

**வணங்கெ னத்தலை அளித்தனை நின்புகழ்**
**வாழ்த்தென நாத்தந்தாய்**
**இணங்கெ னத்திருக் கூட்டமுங் காட்டினை**
**இனிப்பெறும் பேறுண்டோ**
**துணங்கை யிட்டுவெம் பேய்க்கணங் குதித்திடச்**
**சுடலைஆ டரங்காகக்**
**கணங்கள் போற்றிநின் றாடிய குழகனே**
**கருவையெம் பெருமானே. 28**

***பொருள்:*** கொடும் பேய்களின் கூட்டம் துணங்கைக் கூத்தாடிக் குதிக்க, சிவகணங்கள் துதிக்க, மயானம் ஆடும் நாடக மேடையாக நின்று, ஆடிய சிவபெருமானே, திருக்கருவையில் எழுந்தருளிய எம் பரமனே, உன்னை வணங்கத் தலையைத் தந்தாய், உன் புகழை வாழ்த்த நாவைத் தந்தாய், கூட்டுறவு கொள்ள அடியவர் திருக்கூட்டத்தையும் காட்டி அருளினாய், இவை அல்லாமல் இனி நான் பெறும் பயன் வேறு உளதோ?

மனம் மொழி மெய்களால் செய்யும் வழிபாடு களைச் செய்ய வேண்டி யாவும் தந்தாய். அவற்றால் உன்னை வழிபடுதலில் சிறந்த பேறு வேறு உண்டோ என்பார். இனிப்பெறும் பேறுண்டோ என்றார். மனம் கட்டுக்கு அடங்குவது அரிது ஆகையால் சிவபெரு

மானையே சிந்தித்து இருப்பதற்குச் சிவனடியார்களுடனே எப்பொழுதும் பழகி இருத்தல் வேண்டும் என்பதால் இணங்கெனத் திருக்கூட்டமும் காட்டினை என்றார். துணங்கையாவது இருகைகளையும் முடக்கி விலாப் புறத்தில் புடைத்துக் கொண்டு ஆடும் ஒருவகைக் கூத்து ஆகும். முடக்கியிருகை பழுப்புடை யொற்றத் துடக்கிய நடையது துணங்கையாகும் என்பது சூத்திரம்.

*இணங்க-சேர, துணங்கை-ஒருவகைக் கூத்து, கணம்-கூட்டம், ஆடு அரங்கு-நடனமேடை, குழகன்-அழகுடையவன்-சிவபெருமான்.*

**பெருமை சான்றநின் திருவெழுத் தைந்துமே**
**பெரும்புணை எனப்பற்றி**
**அருமை சான்றஇப் பவக்கடல் கடக்குமாறு**
**ஆசையில் துணிகின்றேன்**
**இருமை இன்பமும் அடியவர்க்கு ஊட்டிடும்**
**இறைவனே எம்மானே**
**தரும மூர்த்தியே ஒப்பனை வனமுலை**
**தழுவுதிண் புயத்தானே. 29**

*பொருள்:* இம்மை இன்பத்தினையும், மறுமை இன்பத்தினையும், தன்னை அடைந்த அடியார்களுக்கு ஊட்டும் இறைவனே, எமது பெருமானே, தருமத் தினையே திருவடியாகக் கொண்டவனே, ஒப்பனை என்னும் திருநாமம் வாய்ந்த உமையம்மையின் சந்தனக் கோலம் அமைந்த தனத்தைத் தழுவிய வலிய புயத்தை உடையவனே, பெருமை மிக்க உன் பஞ்சாக்கர மந்திரத்தையே பெரிய தெப்பம் எனப் பற்றி அருமை பொருந்திய இப்பிறவிக் கடலைக் கடக்க வேண்டு மென்று ஆவலோடு துணிகின்றேன். பிறவி வாயிலாக முத்திப்பேறு பெற வேண்டியிருத்தலால் அருமை சான்ற இப்பவக்கடல் என்றார்.

*சான்ற-நிறைந்த, பொருந்திய, பவக்கடல்-பிறவிக்கடல், இருமை-இம்மை, மறுமை, வனம்-அழகு, திண்புயம்-வலிய புயம்.*

தானை எண்திசை முக்கணும் முச்சுடர்
தழைசடை கதிர்க்கற்றை
மேனி வெங்கனல் ஆடிடம் உலகெலாம்
வெந்தொழி புறங்காடு
சேனை வெங்கொலைப் பேய்க்கணம் என்னின்அத்
திருக்களா அமர்ந்தோனை
வான நாடரும் பூதலத் தடியரும்
வணங்குவ தெவ்வாறே. 30

*பொருள்:* உடுக்கும் ஆடை எட்டுத்திக்குகள், மூன்று கண்களும், சோம சூரியாக்கினிகளாகிய மூன்று ஒளி, தழைத்த சடை சூரியனுடைய கிரணத்தொகுதி, திருமேனி கொடிய நெருப்பு, ஆடியருளும் திருவரங்கம் உலகம் எல்லாம் வெந்து ஒழியும் மயானம், சூழ்ந்த சேனைகள் கொடிய கொலைத் தொழிலை உடைய பேய்க்கூட்டங்கள். ஆயின் அத்திருக்களா நிழலில் எழுந்தருளினவனை விண்ணுலகிலுள்ள தேவரும் நிலவுகிலுள்ள அடியவரும் வணங்குவது எவ்வகை ?

அட்டதிக்குப் பாலகர் சூரியன், சந்திரன், அக்கினி முதலிய எல்லாம் நின் ஆடையினும் உறுப்பினும் அடங்குதலின் வானநாடர் தின்னை வணங்குமாறெவ்வாறென்றார் உலகம் எல்லாம் வெந்து நீறான சுடலையே நீ எக்காலத்தும் இடையறாது நடஞ் செய்திருக்கும், இடமாதலாலும், கொலைத் தொழிலினை உடைய பேய்க்கணங்கள் என்றும் உன்னைச் சூழ்ந்து இருப்பதாலும், உன்னுடைய அடியாராய் இவ்வுலகில் உள்ள மக்கள் உன்னை வணங்குவது எவ்வாறென்றார்.

எனவே, தேவரும் மக்களும் முற்ற உணர்ந்து வழிபடுவதற்கு அரிய பெருமை உடையை நீ ஆதலின், மக்களில் கடைப்பட்டேனாகிய நான் உன்னை வழிபடுதலில் பிழைத்தேனாயினும் பொறுத்தருள் என்றார். சிவபெருமானுக்கு நடன அரங்கம் மயானம் ஆதல் குறித்து, கோயில் சுடுகாடு எனபார் மாணிக்க வாசகர். திசையினையே ஆடையாக உடுத்தியிருப்பதால் சிவனுக்குத் திகம்பரன் என்பதும் ஒரு பெயராயிற்று. திக்குகளை அம்பரமாக உடையவன் அம்பரமாவது ஆடை, சிவபெருமானுக்குச் சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணும் ஆகும். இவை மூன்றும் உயிர்களுக்கு முறையே ஞான விளக்கத்தையும், திருவருட்பேற்றினையும், பாச நாசத்தினையும் சிவபெருமான் அளிக்கும் பெற்றியினை இனிது விளக்கும் குறிப்பின் போலும். இச்செய்யுளில் வஞ்சகப் புகழ்ச்சி அணி காணப்படுகிறது.

## நான்காம் பத்து

**முதற்சீர் மாச்சீராகவும் மற்றைய மூன்றும் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் வந்த கலி விருத்தம்**

**எவ்வ முற்ற திரிமலம் இற்றது**
**செவ்வி ஞானத் திருக்கண் திறந்தது**
**கொவ்வை வாயுமை கொண்கன் கருவையான்**
**பௌவ நஞ்சமுண் டான்கழல் பாடவே. 32**

*பொருள்:* கொவ்வைக் கனி போன்ற இதழ்களை உடைய உமையம்மைக்கு தலைவனும், திருக்கருவைப் பதியில் எழுந்தருளியிருக்கிறவனும், கடலில் தோன்றிய நஞ்சினை அமுதமாகக் கொண்டு அருளினவனும் ஆகிய இறைவனின் திருவடிகளைப் புகழ்ந்து பாடக் குற்றம் பொருந்திய மூவகையான ஆணவம், மாயை, கன்மம்

என்னும் மலங்களும் ஒழிந்தன. செம்மையான ஞானக் கண் திறந்தது.

இங்கு வாய் என்றது இதழ்களை திரிமலம் என்றது பன்மையில் ஒருமை வந்த வழுவமைதி, மூவகையாகப் பிரிவுபடும் மலம் என்னின் வழாநிலையேயாகும். மும் மலங்களுள் ஆணவம் என்பது உயிர்களை அனாதியே பற்றி முத்தி நிலையிலும் அணுத்தன்மைபட்டு ஒடுங்கிக் கிடப்பது அல்லது ஆன்மாவை விட்டு அகலாத இயல்பிற்று. அதனால் இது சகசமலம் எனவும் கூறப்பெறும். சகசமாவது இயற்கை. மாயை என்பது உயிர்களுக்கு ஆணவத்தின் வலியைக் கெடுத்துப் பேரின்பப் பேற்றை அளித்தற்குச் சாதனமாக இறைவனது திருவருள் சக்தியால் தொழிற்படுத்தப்பெறும் தனுகரண புவன போகங்கள் தோன்றி ஒடுங்குவதற்கு இடமாகும். முதல் காரணம் ஆகும். கன்மம் என்பது ஆணவ இருளில் கட்டுண்டு செயலற்றுக் கிடந்த ஆன்மா. இறைவனின் அருள் குறிப்பால் பேரின்ப முத்தி நிலை எய்துதல் பொருட்டு மாயா காரியமான தனுகரணாதிகளோடு பொருத்தப்பட்ட வழி அறிவு விளக்கமுறத் தொடங்குத லானே அவ்வறிவு விளக்கத்தின் பக்குவத்திற்கு ஏற்றவாறு நிகழ்த்தும் வினை. இக்கண்மமும் மேற்கூறப்பெற்ற மாயையும் ஆன்மாவைச் செயற்கையாக இடையே வந்து பற்றுவன ஆதலின் இவை இரண்டும் ஆகந்துகமலம் எனப்படும். ஆகந்துகமாவது செயற்கை இயற்கை சகசஞ் செயற்கை யாகந்துகம் என்பது பிரயோக விவேக உரைச்சூத்திரம் ஆகும்.

ஆன்மாவினை அணுத்தன்மை செய்து நிற்றலானும், ஆன்மாவின் முத்தி நிலையில் அதனை அணுத்தன்மை செய்து நின்ற தான் அணுத்தன்மை பட்டு நிற்றலானும் ஆணவம் எனப்பட்டது. தனுகரண புவன போகங்கள் தோன்றி ஒடுங்குவதற்கு இடமாதல் பற்றி மாயை

எனப்பட்டது. மா, ஒடுங்குதல், யா-வருதல், இச்சா ஞானக் கிரியைகளால் உண்டாம் தொழில் கன்மம் எனப்பட்டது. கன்மம்-தொழில்-வினை. ஞானக்கண்ணை பாச இருள் மூடியிருந்தது ஆதலால், அப்பாசம் அகலவே ஞானக்கண் திறந்தது என்பார். மலமிற்றது-கண் திறந்தது என்றார்.

*எவ்வம்-குற்றம், செவ்வி-செம்மை, கொண்கன்-கணவன், பௌவம்-கடல்.*

பாடி னேன்புகழ் பங்கயச் சேவடி
சூடினேன் கரு வாபுரிச் சோதியை
நாடி னேன் அவன்நான் எனும் வேற்ற
கூடி னேன்அடி யார்திருக் கூட்டமே. 32

*பொருள்:* இறைவன் புகழை எடுத்துப் பாடினேன். அவனது செவ்விய திருவடித் தாமரைகளைத் தலையில் சூடினேன். திருக்கருவாபுரியில் எழுந்தருளிய ஞான தேஜோமயனை அவன் நான் என்னும் வேறு வேறுபாடு அகலத் தியானித்தேன். அடியவர்களின் திருக்கூட்டத்துடன் கலந்திருந்தேன்.

பாடுதல், வாக்காற் செய்யும் வழிபாடு, சேவடி சூடுதல், மெய்யால் செய்யும் வழிபாடு, சோதியை நாடுதல் மனத்தால் செய்யும் வழிபாடு, அதனால் மனம் மொழி மெய்களால் செய்யக்கூடிய மூன்றுவகை வழிபாடுகளையும் கூறினர்.

கூட்ட மிட்ட கருவி குலைந்திடச்
சேட்டை யற்றுள் அறிவு சிதையுமுன்
நாட்டம் மூன்றுடை நாதன் முகலிங்கன்
தாட்டு ணைக்கம லம்தலைக் கொண்மினே.33

*பொருள்:* கூட்டம் கூட்டமாகக் கூடிய சத்த முதலிய தத்துவங்கள் தத்தம் நிலையிலிருந்து தடுமாற அத்தத்துவக் குறும்புகள் ஒழிந்து உள்ளிருக்கும் அறிவு

கெடுவதற்கு முன்னரே சோம சூரியாக்கினி என்னும் மூன்று கண்களை உடைய தலைவனும் திருமுகம் வாய்ந்த லிங்க வடிவினன் ஆகிய இறைவனின் இரண்டு திருவடித் தாமரைகளைத் தலையில் சூடுங்கள். அதனால் பெறுதற்கரிய பேற்றினைப் பெறுவீர்கள். யாக்கை நிலையற்றது அதனால் கருத்துள்ள போதே சிவ பெருமானின் திருவருளுக்கு ஆட்படுங்கள் என்றார்.

*கருவி-கருவிகளான சத்தம் பரிசம் முதலிய தத்துவங்கள், சேட்டை-சேஷ்டை-குறும்புச் செயல், கொண்மின்-கொள்ளுங்கள்.*

**தலைக்கொள் வெண்தலை மாலையன் தண்ணிலா**
**மிலைக்கும் தென்கரு வாபுரி வேதியன்**
**புலைக்கு ரம்பை யுடம்பிற் குடிபுகுந்து**
**அலைக்கும் நெஞ்சம் ஒழித்தேனை ஆள்வனே. 34**

*பொருள்:* முதன்மை வாய்ந்த பிரமன் முதலியவர்களது வெளுத்த மண்டை ஓடுகளை மாலையாக உடையவன், குளிர்ச்சி பொருந்திய இளஞ் சந்திரனை தன் தலையில் சூடிய சடாமுடியினை உடையவன். தென் திசையில் உள்ள திருக்கருவையில் கோயில் கொண்டு எழுந்தருளிய வேதநாயகனாகிய சிவபெருமான், கீழ்மையாகிய குடிலாய் உள்ள என் உடம்பில் தான் குடியேறி கலக்கும் மனத்தை ஒழித்து எனை அடிமை கொள்வான்.

கலக்கும் மனத்தை ஒழித்தலாவது, மனக்கலக்கத்தை ஒழித்தல், அதாவது நிலையற்ற சிற்றின்பங்களை நாடிச் சிதர்ந்து பல முகப்பட்டு அலையும் மனத்தை ஒருமுகப் படுத்திச் சிவபெருமான் திருவடி மீது நிலைத்து நிற்கச் செய்தல். முடை நாற்றமுடைய கபாலங்களை மனம் ஒப்பி மாலையாக அணிந்தவன் ஆதலால் புலைக்குரும்பை என்று அருவருப்புக் கொள்ளாது என் உடம்பினும் புகுந்து என்னை ஆள்வான் என்றார்.

*தன் நிலா-குளிர்ச்சி பொருந்திய சந்திரன், மிலைக்கும்-சூடும், புலை-கீழ்மையான, குரம்பை-சிறு குடில்.*

**என்னை ஆள்பவன் என்னுள் இருப்பவன்**
**தன்னை யான்தொழத் தண்ணளி தந்தவன்**
**பொன்னை யாளும் புயன்தொழ நின்றவன்**
**கன்னி பாகன் கருவைக் கிறைவனே. 35**

*பொருள்:* திருமகளைத் தழுவும் புயத்தினை உடைய திருமால் வணங்க நின்றவனும், உமையம்மை யினை இடப்பாகத்தில் கொண்டவனும், கருவாபுரிக்குத் தலைவனுமாகிய சிவபெருமானே என்னை அடிமை கொள்வோனும், என் இதய தாமரையில் வசிப்ப வனுமாம் தன்னை நான் வணங்கத் தண்ணிய கருணை செய்தோனாயினான். உயிர்களின் உள்ளத்து இடையறாது வீற்றிருப்பவன் அதனால் என்னுள்ளிருப்பவன் என்றார்.

*தண் அளி-குளிர்ந்த அருள், பொன்-இலக்குமி, உலகுயிர்களை ஈன்றும் ஈனாதவளாய் என்றும் அழியா இளமையோடு இருத்தலின் உமையம்மை கன்னி எனப்படுவாள்.*

**இறைவன் எங்கணும் யாவையும் ஆனவன்**
**பிறைய ணிந்த சடிலன் பெருந்தகை**
**கறையி லங்கு மிடற்றன் கருவையான்**
**மறைய நின்றெனை ஆண்டதெம் மாயமே. 36**

*பொருள்:* உலக உயிர்களுக்கு இறைவனாக உள்ளவனும், எவ்விடத்தும் எப்பொருளும் ஆனவனும், பிறைமதியை அணிந்த சடாமுடியினை உடையவனும், உயிர்களுக்கு அருளும் பெருந்தன்மையைக் கொண்டவனும், தேவர்கள் உய்ய விடம் விளங்கிய திருக்கண்டத்தை உடையவனும் திருக்கருவைப் பதியில்

எழுந்தருளி உள்ளவனுமாகிய இறைவன் தான் மறைய நின்று என்னை அடிமை கொண்டது என்ன இந்திரஜாலம்.

தேவர்கள் உய்யும் பொருட்டு உட்கொண்ட விடத்தால் உண்டான கறை ஆதலால், அது அவனது அருட்பெருந்தன்மை விளங்க நின்றது என்பார். பெருந்தகை கறையிலங்கு மிடற்றன் என்றார். எங்கும் வியாபித்திருந்தும் வெளித்தோன்றாது நிற்பதும், அவ்வாறு மறைந்து நின்று என்னை ஆண்டதும் பெருவியப்பே என்பார். மறையநின்றெனை யாண்டதெம் யாயமே என்றார்.

***சடிலன்-சடையினை உடையவன், கறை-களங்கம், இலங்கு-விளங்கு, மிடற்றன்-கழுத்தன், பெருந்தகை-பெருந்தன்மை உடையவன்.***

**மாய வல்லிருள் நீங்க மனத்திடைத்**
**தூய ஞானச் சுடர்விளக் கேற்றிய**
**நாய கண்களா வீசன் நரைமயிர்**
**பாய மால்விடை யான்பர மேட்டியே. 37**

*பொருள்:* மாயமாகிய கெடாத இருள் நீங்க, என் மனத்தினிடத்துத் தூய ஞானமாகிய ஒளிவீசும் விளக்கினை ஏற்றியருளிய இறைவனாவான். திருக்களா நீழலில் எழுந்தருளியிருக்கின்ற ஈசனும், வெள்ளிய மயிர் பரவிய பெரிய இடபத்தை வாகனமாக உடையவனும், பரமேட்டியும் ஆகியவன்.சுடர் விளக்கேற்றிய என்றதனால் அவன் ஆண்டருளி ஏற்றுவதற்கு முன்னே ஞான விளக்கம் பாசத்தால் மூடப்பட்டு சுடர் விட்டு எரியாது கிடந்தது என்பது பெறப்படும். தூய ஞானம் என்றது பதிஞானத்தை

*பாய-பரவிய, பாயிருள் என வருவது காண்க. பரமேட்டி-சிவபெருமான்.*

பரம எனக்குனை யன்றியோர் பற்றிலேன்
சரம முற்றிய போதில் தருவையோ
கருவை நிற்கும் களாமுத லேமறைச்
சிரமி ருக்குந் திருவடிச் செல்வமே. 38

*பொருள்:* திருக்கருவையில் உள்ள திருக்களா நிழலில் எழுந்தருளியிருக்கின்ற முதல்வனே, நான் உன்னையன்றி ஒரு பற்றுக்கோடில்லேன். அதனால் எனக்கு சரமதிசை நேர்ந்த காலத்தில் வேத முடியிலிருக்கும் உன் திருவடியாகிய அருள் செல்வத்தைத் தந்தருள்வாயோ? பாரம் ஒருவன்பால் ஒன்றை இரப்போன் நின்னையே நம்பி வந்தேன் நின்னையன்றி எனக்கு வேறு கதியில்லை. என அவன் தனக்கு இன்றியமையாமையினையும் தனக்கு ஆதரவு வேறற்ற தன்மையினையும் உரைத்துப் பின்னர் வேண்டிய பொருளைக் கேட்டல் இயல்பு ஆதலால் பரம் எனக்கு உனையன்றியோர் பற்றிலை என்பதை முன்னர்க் கூறித் தாம் வேண்டிய பொருளாகிய திருவடிச் செல்வத்தை இறுதியில் கூறினார்.

*பரம்--பாரம், சரமம் - அந்திம காலம்.*

செல்வம் ஈயும் சிறப்பும் அளித்துளத்து
அல்லல் தீர்க்கும் அறிவை உதவிடும்
கல்வி நல்கும் கதிதரும் பொற்கிரி
வல்வி லான்கள ஈசனை வாழ்த்தவே. 39

*பொருள்:* பொன்மலையாகிய மேருவை வலிய வில்லாக உடையவனாகிய களாநிழலில் எழுந்தருளிய இறைவனை ஒருவன் வாழ்த்த, அவ்வாழ்த்து அவனுக்கு இம்மையில் நுகர்வதற்குரிய செல்வத்தைத் தரும். நல்ல

மதிப்பையும் தரும். மனதில் உள்ள கவலையினையும் தீர்க்கும். உணர்ச்சியையும் தரும். அந்த உணர்ச்சிக்குக் காரணமாகிய கல்வியையும் தரும் மறுமையில் மோட்சத்தையும் தரும்.

அல்லலைத் தருவது செல்வமாயினும் உன்னை வாழ்த்துவதால் பெற்ற செல்வமாதலால் அது சிறப்பினையே தரும். செல்வம் ஈயும் சிறப்பும் அளித்துளத் தல்லல் தீர்க்கும் என்றார். பொன்மலையினையே ஓர் ஆயுதமாகக் கொண்ட பெருஞ் செல்வனாதலால், தன்னை வாழ்த்தினார்க்குச் செல்வமும் செல்வத்தால் பெறப்படும் சிறப்பும் அளித்தல் எளிதென்பதும், மலையினையே வில்லாக வளைத்தவன் ஆதலால் அன்பர்கள் மனதை வளைத்து அல்லல் அகற்றலும் அறிவு உதவுதலும், கல்வி வழங்குதலும் எளிதாகும்.

**வாழ்வை நம்பி மதிகெட்டுக் கும்பியில்**
**வீழ்புன் மாந்தர்க் குறுதி விளம்புவேன்**
**தாழ்ச டைக்கள வீசன்தன் ஆலயம்**
**சூழ்தல் சூழில் துறக்கம் கிடைக்குமே. 40**

***பொருள்:*** இவ்வுலக வாழ்க்கையை ஒரு பொருளாக நம்பி, சிவபெருமானை உணரும் உணர்ச்சிகெட்டு, நரகத்தில் வீழும் புல்லறிவினை உடைய மனிதர்க்கு ஒரு உறுதியை எடுத்துக் கூறா நிற்பேன். தாழ்ந்த சடையினை உடைய களாநிழலில் எழுந்தருளிய இறைவனின் திருக்கோயிலை வலம் வந்தால் முத்தி கைகூடும். சூழ்தல் என்பதற்குக் கருதுதல் என்னும் பொருளும் உண்டு ஆகையால் சூழ்தல் சூழின்-வலம் வருதலைக் கருதினால் என்றும் பொருள் உரைப்பதுண்டு. துறக்கம் கிடைப்பது வலம் வருதலால் என்பதேயன்றி வலம் வருதலைக் கருதுவதால் என்பதில்லை ஆகையால் முன்னைய பொருளே சிறக்கும்.

***கும்பி – நரகம், சூழ்தல் – வலம் செய்க, சூழின் – வலம் செய்தல்.***

## ஐந்தாம் பத்து

*கொச்சகக் கலிப்பா*

கிடைத்தபொருள் கரத்திருக்கக்
கிடைத்திலவென் றயர்வார்போல்
படைத்தநின தருள்பெற்றும்
பெற்றிலர்போற் பரிவுற்றேன்
முடைத்தலையிற் பலிகொள்ளும்
முகலிங்கா முகிழ்த்தநிலாச்
சடைத்தலையால் நின்மாயம்
யானுணருங் தரத்ததோ ? 41

***பொருள்:*** புலால் நாற்றமுடைய பிரமகபாலத்தில் பலி ஏற்ற முகலிங்கநாதனே, கலை ஒடுங்கிய இளஞ் சந்திரனைச் சூடிய சடையுடன் கூடிய திருமுடியை உடையவனே, விரும்பியன கிடைத்துவிட்ட பொருளாகக் கையில் இருக்க விரும்பியன கிடைக்க வில்லை என்று மனம் தளர்ந்து வருத்தமடைபவர்களைப் போல, படைத்த உன் அருளைப் பெற்றும் நான் பெறாதவர் போல வருந்தா நின்றேன். உன்னுடைய மாயா சக்தி நான் உணரும் தன்மையதோ ?

ஆணவத்தின் வலியைக் கெடுத்து ஆன்மாவை இறைவன் அடியில் சேர்த்தற்குக் கருவியாக கொடுக்கப் பெற்றதே இந்த உடல் ஆதலால் இவ்வுடம்பைப் பெற்றது ஒன்றுமே நினக்கு என்மேல் உள்ள அருள் பெருக்கைப் புலப்படுத்தா நிற்க, உன் அருளைப் பெறாதவன் போல் உளம் என்னோ என்பார். படைத்தநின தருள்பெற்றும் பெற்றிலர்போற் பரிவுற்றேன் என்றார். முடைத்தலை

கைக்கொள்வதும், சர்வேஸ்வரனாகிய நீ பலி கொள் வதும், நின் அருளை எனக்கு அளித்தமை கண்கூடாகக் கிடக்கவும், யான் அதை அறியாமல் வருந்தச் செய்வதும், யாராலும் உணரமுடியாத பெருமாயமோ யிரா நின்றன என்பார். நின் மாயம் யானுணரும் தரத்ததோ? என்றார்.

*பரிவு - துன்பம், முடை - நாற்றம், முகிழ்த்த - குவிந்த, நிலா - சந்திரன்.*

**உணராத நின்நிலையை**
**நீஉணர்த்த உணர்ந்ததற்பின்**
**புணராத தாடலையிற்**
**புணர்ந்ததெனப் புளகோங்கத்**
**தணவாமல் எனைஉனக்குத்**
**தந்துருகி இரண்டற்றேன்**
**பணராசச் சிலம்பணிந்த**
**பழமறைஎம் பெருமானே. 42**

***பொருள்:*** சிலம்பாகப் பாம்பரசைத் தரித்த பழமைமிகு வேதங்களுக்குரிய எமது தலைவனே, அறிதற்கு அரிய உன் நிலையை நீ அறிவிக்க நான் அறிந்த பின் கிடைத்தற்கரிய உன் திருவடி என் தலையில் பொருந்தியது என்று கருதி, ஆனந்தம் பெருக என்னை உனக்கு நீங்காமல் கொடுத்து, துவிதபாவனை இழந்து அத்துவித வாழ்வினைப் பெற்றேன். இதைவிட நான் பெறத்தக்க பேறு ஒன்றுமில்லை.

இரண்டறுதலாவது சிவபெருமானின்றும் தன்னைப் பிரித்துணரும் துவித பாவனை நீங்கிச் சிவபெருமானது உடைமையை தானாதலால் தனக்கென வேறு தனிநிலை இல்லை என்னும் அத்துவித பாவனை பெறுதல். இதுவே

அத்துவித முத்திநிலை. இந்நிலையினைப் புலப்படுத்தவே தாடலையிற் புணர்ந்ததென என்று இருபொருள்படக் கூறினார். இதிலிருந்து கிடைக்கும் மற்றொரு பொருளாவது தாள்தலை என்னும் இருசொற்கள் தாடலை என்று ஒருசொல் நீர்மையவாய்ப் புணர்ந்து நின்றாற் போல என்பதாகும். இம்முத்தி நிலையே சாயுச்சியம் எனப்படும். அந்நிலையிலும் சிவபெருமான் ஆண்டானும் அடிமை அடியுமையுமாகும். பெற்றி மாறுபடுவதில்லை என்பது சிந்தாந்த நூல் துணிபாதலால், சிவபெருமானின் இன்புருவத் தாளை ஆன்மாவாகிய தலை சேரும் என்பது போதரத் தாள்தலை என்னும் இரு சொற்களின் புணர்ச்சி நிலை உதாரணமாகக் காட்டப்பெற்றது. துணிவு பற்றி இரண்டற்றேன் என இறந்த காலத்தால் கூறினார். இதற்கு இவ்வாறன்றியான் என்னும் அகப்பற்றும் எனது என்னும் புறப்பற்றும் நீங்கப்பெற்றேன் எனப் பொருள் கூறுவாரு முண்டு.

*புளகு - மகிழ்ச்சி, தணவாமல் - நீங்காமல், பணம் - படம், இலக்கணையால் படத்தையுடைய பாம்புக்கு பெயராயிற்று. புகழோங்க, பணராசி என்பனவும் பாடம் ஆகும்.*

**பழமையாம் வாதனையில்**
**படிந்தமனப் பந்தத்தின்**
**விழைவினால் தலைமயங்கி**
**வேறுவே றுருவெடுத்துச்**
**சுழல்குயவன் திகிரியைப்போல்**
**பவக்கடலிற் சுழல்வேனோ**
**மழவிடையாய் பால்வண்ணா**
**வானவர்தம் கோமானே. 43**

*பொருள்:* இளமை பொருந்திய இடபவாகனனே, பால் வண்ண நாதனே, தேவர்களுக்கு இறைவனே. தொன்றுதொட்டு உள்ள துன்பத்தில் அழுந்திய மனப்

பற்றால் விளைந்த ஆசையினால் அறிவு மயங்கி வேறு வேறு உருவம் கொண்டு மீண்டும் மீண்டும் பிறந்து, குயவனின் சுழலும் சக்கரத்தைப் போலப் பிறவிக் கடலில் சுழலக் கடவேனோ?

துன்பம் அனைத்திற்கும் மூல காரணம் அறியாமை வடிவிற்றாகிய ஆணவமே ஆதலால் ஆணவம் செம்பிற் களிம்பு போல ஆன்மாவை அனாதியே பற்றுள்ளது ஆதலால் பழமையாம் வாதனை என்றார்.

*வாதனை - துன்பம், பந்தம் - பற்று, விழைவு - ஆசை, தலை மயங்கி- அறிவு மயங்கி, திகிரி – சக்கரம்.*

**கோமானே கருவைவரும்**
**குணக்குன்றே மலரிதழித்**
**தேமாலை புனைந்தசடைச்**
**செழுஞ்சுடரே என்றென்று**
**பாமாலை வாய்பாடிக்**
**கைகொட்டிப் பதம்பெயர்த்து**
**நாமாட வம்மின்காள்**
**தொண்டராய் நமரங்காள். 44**

***பொருள்:*** நம்மவர்களே, இறைவனே, திருக் கருவையில் எழுந்தருளியிருக்கின்ற குணாதீத மலையே, தேன் பொருந்திய கொன்றை மலரால் தொடுத்த மாலையினைத் தரித்த சடாமுடியினை உடைய சிறந்த ஒளிப்பிழம்பே என்று சொல்லித் தோத்திரப் பாமாலைகள் பல வாயால் பாடிக் கைபுடைத்தும், கால் பெயர்த்தும், நாம் ஆனந்தக் கூத்து ஆடுவதற்குச் சிவபெருமானது அடியவராய் வாருங்கள்.

***இதழி - கொன்றை, தேன்+மாலை=தேமாலை, மெலிவுர இறுதி அழிந்தது வம்மின்கள் - வாருங்கள், நமரங்காள் - நம்முடையவர்களே, சிவபெருமான் புகழைப் பாடியாடுதல் தமக்கின்பஞ் செய்தலின், நமரங்காள் வம்மின் என்று பிறரையும் அழைக்கின்றார்.***

தொண்டுசெய்து வழிபட்டுச்
சுருதிபுகழ் களாவீசன்
புண்டரிக மலர்த்தாளைப்
போற்றிமுதற் பேறுபெற்றார்
அண்டர்பிரான் நான்முகத்தோன்
ஆழியான் இவரென்றால்
மண்டனிஞா லத்தெளிய
மானுடரோ வழுத்துவார். 45

*பொருள்:* வேதம் புகழும் திருக்களா நிழலில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனின் தாமரை மலரை ஒத்த திருவடிகளை வணங்கித் திருத்தொண்டு செய்து பூசித்து முன்னர் பயன்களைப் பெற்றவர்கள் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும், நான்கு முகங்களைக் கொண்ட பிரமனும், சக்கரத்தினைக் கொண்ட திருமாலும் ஆகிய இவர்களால் மண்ணால் ஆன ஒப்பில்லாத நிலவுலகத்துள்ள வலியில்லாத மக்கள் பிறப்பினரோ அவன் திருவடிப் புகழைப் பேசுதற்கு அருகர்.

தேவலோகங்களிலும் இவ்வுலகம் தாழ்ந்தது ஆயினும் முத்திக்குச் சாதனமான மக்கள் யாக்கை நிலவுவதற்கு இடமாவது இவ்வுலகமே ஆதலால் தனி ஞாலம் என்றார்.

*சுருதி - வேதம், புண்டரிகம் - தாமரை, அண்டர்பிரான் - தேவர் தலைவன், ஆழி - சக்கரம், ஞாலம் - உலகம், ஆழியான் - கடலில் துயில்வோன்.*

வழுத்திடுவேன் நாவார
மலரிடுவேன் கரங்கொண்டு
தொழத்தகுவேன் முடிதாழ்த்தி
சூழவருவேன் துணைரத்தாளால்

**அழுத்திடுவேன் மனத்துன்னை**
**அகம்புறமொன் றாயுருகிப்**
**பழிச்சிடுவேன் அருள்கனிய**
**பால்வண்ணா நம்பரனே. 46**

*பொருள்:* பால் வண்ணனே, நமது பரமனே, உன் திருவருள் சுரக்க, என் நாத்தெவிட்டத் துதிப்பேன். என் கையால் மலர்கொண்டு அர்ச்சிப்பேன், தலையினை வளைத்து வணங்குவேன். என் இரண்டு கால்களால் வலம் வருவேன். மனத்தில் உன்னைத் தியானிப்பேன். அகமும் புறமும் ஒருசேர உருகித் துதிப்பேன்.

பழிச்சிடுவேன் என்பது பழித்திடுவேன் என நின்றது. சகரத்துக்குத் தகரம் போல ஆதலின் பழிச்சல்-துதித்தல் பழூத்திடுவேன் என்பதும் பாடம். இடு, தகு, வரு என்பன துணை வினைகள்.

**நம்பியுன தருள்வேட்டு**
**நடுக்கடலுட் கலங்கவிழ்த்து**
**வெம்புதுயர் மனத்தார் போல்**
**மெலிகின்றேன் நெடுநாளா**
**கும்பமுனிக் கருள்புரியுங்**
**கொற்றவனே முகலிங்கா**
**தும்பைமுடித் தோய்புரக்க**
**இரக்கமின்னந் தோன்றாதோ. 47**

*பொருள்:* அகத்திய முனிவர்க்கருளிய வெற்றியை உடையவனே, முகலிங்கனே, தும்பை மலரினை முடியில் சூடியவனே, உன் திருவடியை ஒரு பற்றுக் கோடாகக் கொண்டு, அதனை விரும்பி, கடல் நடுவுள் தமது மரக்கலத்தைக் கவிழ்த்து,அதனை மீட்கும் பெறவருந்தும் துன்பம் வாய்ந்த மனத்தை உடையவர்போல், நெடு

நாளாக மனம் மெலிகின்றேன்,என்னைப் பாதுகாக்க இன்னும் திருவுள்ளத்தில் இரக்கம் வராதா ?

விரைவில் கரைசேர்க்க வல்ல புணை ஒன்றினைக் கண்டு அதை அடைய விரும்பித் தாம் செல்லும் கலத்தைக் கவிழ்த்தார் போல, நானும் உன் திருவருளாகிய புணையைக் கண்டு அதுகொண்டு விரைவில் கரை சேரலாம் என்று நம்பி அதை அடைய விரும்பி யான் பற்றாகப் பற்றியிருந்த இவ்வுலகப் பற்றுகளை எல்லாம் விட்டு ஒழித்தேன். இருந்தும் இன்னும் உன் திருவருட் புணை என் கைக்கு எட்டிலது. நெடுநாளாய் வருந்துகின்றேன். அதனால் நீ இனியும் தாமதிக்காமல் என்னைக் காக்க உன் திருவருட்புணையை எனக்கு அளித்து அருள் என்பார்.

**தோன்றியபோ துடன்தோன்றித்**
**தோன்றாது மறைத்தென்னை**
**ஆன்றசெலுஞ் செம்பிலுறை**
**களிம்புபோல் அகலாமல்**
**ஊன்றுமலத் துகளகற்றி**
**உன்அருளும் பெறுவேனோ ?**
**மூன்றுலகுந் தொழுதேத்தும்**
**முகலிங்கா முதற்பொருளே. 48**

*பொருள்:* மூன்று உலகங்களும் (மேல், கீழ், நடு) வணங்கித் துதிக்கும் முகலிங்கனே, அனைத்திற்கும் முதலாய் உள்ளவனே. நான் தோன்றிய பொழுது, பொருந்திய செழுமையான செம்பில் களிம்புபோல், என்னுடன் தோன்றி யான் தோன்றாமல் என்னை மறைத்து என்னை விட்டு நீங்காமல் அழுந்திய மலக் குற்றத்தை ஒழித்து உன் திருவருளும் பெற்று உய்வேனோ?

***துகள் – குற்றம்.***

பொருள்வேட்டும் நிலம்வேட்டும்
பூவையர்தம் புணர்கலவி
மருள்வேட்டும் நாடோறும்
மனவலிகெட் டயர்கின்றேன்
அருள்வேட்டுன் சன்னிதிப்பட்
டருந்துயர்போல் உய்வேனோ ?
தெருள்வேட்டார்க் கருள்புரியுந்
திருக்களவில் உறைவோனே. 49

*பொருள்:* ஞானத்தை விரும்புபவர்களுக்குத் திருவருள் செய்யும் திருக்களா நிழலில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனே, எந்நாளும் பொன்னை விரும்பியும், பூமியை விரும்பியும், நாகணவாய்ப்பட்சி போலும் சொற்களை உடைய பெண்களோடு புணரும் புணர்ச்சியின் மயக்கத்தை விரும்பியும், மனவலி இழந்து சோர்கிறேன். உன் திருவருளை விரும்பி உன் சந்நிதியை அடைந்து தங்குதற்கு அரிய பிறவித் துன்பத்தினின்று நீங்கி நான் பிழைப்பேனோ ?

அழுகின்ற குழந்தைக்கு அன்னையும் அமுது ஊட்டுவாள். ஆதலின் நின் திருவடி ஞானத்தை விரும்புவோர்க்கே நீ அருள்வாய் நானோ பொருளையும், நிலத்தையும், பூவையரையும் காதலித்து, அக்காதலால் வரும் துன்பத்தால் மன வலிமை கெட்டு சோர்வடை கின்றேன். அன்று உன் திருவடி ஞானத்தைக் காதலித் திலேன். எனக்கு உன் அருள் கிட்டுவது எவ்வாறு: கிட்டாவழி யான் துயரகன்று உய்தல் கூடுமோ, கூடாதோ என்று இரங்குவார். உய்வேனோ என்றார்.

உறைவாய்நன் மனத்தன்பர்
உடல்தோறும் உயிராகி
நிறைவாய்எவ் வுலகனைத்தும்
நீக்கமிலா துணர்ந்தோர்க்கு

மறைவாய்உய்த் துணரார்க்கு
மறைபயிலுங் கருவையில்வாழ்
இறைவா நின் திருவிளையாட்டு
யான்வழுத்த அடங்காதே. 50

*பொருள்:* உன்னை வழிபடும் நல்ல மனத்தினை உடைய அடியார்களின் சரீரம் தோறும் அவர்கள் உயிரே நீயாக அருள்வாய். உன்னை உணர்ந்த சிவஞானிகளுக்கு எல்லா உலகமுற்றும் எள்ளுக்குள் எண்ணெய் நீங்காது போல நிறைந்தருளுவாய். உன்னை ஆராய்ந்து அறியாதவர்க்கு மறைந்து அருள்வாய். நான்கு வேதம் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே, இவ்வூரிலுள்ள உன் திருவிளையாடலை எடுத்துத் துதிக்க, என் துதியில் அடங்காது.

## ஆறாம் பத்து

**முதற்சீரும் மூன்றாம் சீரும் ஐந்தாம் சீரும் காய்ச்சீர்களாகவும் மற்றைய மாச்சீர்களாகவும் வந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்**

காதற்பெ ருக்கும் ஒருகோடி கோடி
கவலைப்பெ ருக்கும் மிகலாய்
வாதைப்ப டுத்த அலைமாறு போல
மனமாலு ழன்று விடவோ
வேதப்பெ ருக்கு முழவோசை விம்மு
விழவிற்பெ ருக்கும் இயல்கூர்
நாதப்பெ ருக்கும் ஒழியாது மல்கு
கருவேச ஞான உருவே. 51

*பொருள்:* வேதங்களின் அளவில்லாத ஒலியும், வாச்சியத்தின் ஓசையும், எங்கும் நிறைந்த உற்சவங்களின் ஆரவாரப் பெருக்கும், இலக்கணத்துடன் கூடிய வீணை முதலிய இசைக் கருவிகளின் ஒலியும், நீங்காது நிறைந்து

இருக்கும் திருக்கருவையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே, கடலிலே அலைகள் ஒன்றன் பின் ஒன்றாக மாறுபட்டு வருவது போல, எனக்குள்ள ஆசைப் பெருக்கம் ஒரு கோடியும் கவலைப் பெருக்கம் ஒரு கோடியும் ஆக மிகுந்து வாதை செய்ய என் மனம் இம்மயக்கத்தில் சுழன்று அலையக் கடவேனோ?

ஆசையாவது பற்று, பற்றின் வருதலே கவலை ஆதலால் காதற்பெருக்கு மொருகோடி கோடி கவலை பெருக்கு மிகலாய் என்றார். ஒரு கோடி கோடி என்பது மிகுதி குறித்தது. ஓசைகள் பல கூடி கலங்கினாற் போல பலதிறப்பட்ட காதலும் கவலையும் கூட என் மனம் கலங்குகிறது என்பார். வேதப்பெருக்கு முதலாயின ஒழியாது மல்கு கருவேச என விளித்தார். அலையானது எழுந்தும் விழுந்தும் மாறுவது போல என் மனமும் காதலால் எழுந்தும் கவலையால் விழுந்தும் தடுமாறிச் சுழல்கிறது என்பார். அலைமாறு போல மனமா வுழன்று விடவோ என்றார்.

*மால்-மயக்கமும், விழவு - விழா, உற்சவம், முழவு-ஒருவகை இசைக்கருவி, பஞ்சமுகவாத்தியம், குடமுழா, குடமுழவு என்றும் வழங்கப்பெறும். மல்குதல்-நிறைதல், காதல் -- ஆசை.*

உருவாகி நிற்றி அருவாகி நிற்றி
உயிரோடெ வைக்கும் உறவாய்
மருவாகி நிற்றி மலராகி நிற்றி
மறையாகி நிற்றி மறையின்
பொருளாகி நிற்றி உனையான றிந்து
புகழ்கின்ற வாறும் அறியேன்
கருவாபு ரிக்குள் உறைதேவ தேவ
கதியேதெ னக்கு மொழியே. 52

*பொருள்:* கருவாபுரியில் எழுந்தருளிய திருமால் முதலிய தேவர்களுக்குத் தேவனே, திரு உருவம் கொண்டு நிற்கின்றாய். அருபியாயும் நிற்கின்றாய் சித்துப் பொருள் களோடு எப்பொருளுக்கும் உறவாய் விரவி மலரும் வாசனையும் போல நிற்கின்றாய். வேதமாகி நிற்கின்றாய், வேதத்தின் பொருளாகி நிற்கின்றாய். நீ இவ்வாறு நிற்பதால் நான் உன்னை ஐயமற உணர்ந்து உன்னை வாழ்த்தும் வகையையும் அறியேன். எனக்கு உன்னையன்றி துணையேது? கூறியருளாய்.

உருவமாகவும் அருவமாகவும் உலகத்தோடும் உயிர்களோடும் ஒன்றியும் ஒன்றாமலும், மலரும் மணமும் போலவும், வேதமே ஆகவும் வேதத்தின் பொருளாகவும், இப்படி இன்னது என்று துணியப்படா இயல்பினை யாதலின் உன்னை அறிவது அரிதாக உள்ளது. அதனால் அறிந்து புகழ்கின்றவாறும் அறியேன் என்றார்.

**மொழிகின்ற ஆறு சமயங்கள் தோறும்**
**முழுதுஞ்சு ழன்று நிலையற்று**
**அழிகின்ற சிந்தை அவலங்கெ டுத்துன்**
**அடிகண்டு நாடி யறியும்**
**விழியுங் கொடுத்த முகலிங்க நாத**
**மிகுமன்பர் தேடு பொருளே**
**பொழியுங் கடைக்கண் அருளால ளித்தி**
**புரையற்ற முத்தி நிலையே. 53**

*பொருள்:* ஆறு வகையாகச் சொல்லப்படுகின்ற புறச் சமயங்களில் எல்லாம் முழுவதும் சுழற்சியை அடைந்து நிற்கும் நிலை கெட்டு அழியா நின்ற மனத்தில் உள்ள துன்பத்தை ஒழித்ததே அன்றி உன் திருவடியினைத் தேடி உணர்ந்து தரிசிக்க ஞானக் கண்ணை அடியேனுக்குக்

கொடுத்தும் அருளிய முகலிங்கநாதனே, முறுகிய அன்பினை உடையோர் ஈட்டும் ஞானச் செல்வமே, குற்றமற்ற மோட்ச நிலையைத் திருக்கடைக்கண் சுரக்கும் அருளால் கொடுத்தருளாய்.

கணப்பொழுதேனும் ஒரு நிலையில் நில்லாமல் எப்பொழுதும் கறங்குபோல் சுழன்று திரிவது மனத்தின் இயற்கை. ஆதலின் பற்றுக்கோடு ஒன்று இல்லாதவிடத்து, அது நங்கூரமும், மீகாமனும் இல்லா மரக்கலம் போல துறை தெரியாது ஓடித் தெறிகட்டுப் போகும். அவ்வாறு கெட்டு ஒழியாமைப் பொருட்டு அம்மனத்தினை ஒரு நிலையில் பிணித்து வைத்தல் இன்றியமையாது வேண்டப் படுவதாகும். சுழலும் இயல்புடைய மனத்தினுக்கு ஒரு பற்றுக்கோடாகும் அந்நிலையே சமயம் எனப்படும். ஆதலின் பற்றுக் கோடாம் எனக் கருதி நான் பற்றிய அப்பற்றுக் கோடெல்லாம் பற்றுக் கோடாகா தொழியவே, என் சிந்தை தன் இயல்பின்படி நிலையற்றுச் சுழன்று துன்புற்றது.

அது சமயம் நீ உன் திருவடிகளை எனக்குப் பற்றுக் கோடாக அருளி என் மனத்துன்பத்தினை ஒழித்தாய் என்பார். சிந்தை அவலங்கெடுத்து என்றார். விழியும் கொடுத்த என்பதில் உம்மை சிறந்தது தழீஇய எச்சவும்மை விழிகொடுத்தும் எனக்கொண்டு அருளிய என்பதை இசையெச்சமாகக் கொள்ளலாம். அவலங் கெடுத்தருளி யதேயன்றி விழி கொடுத்தும் அருளிய என்பது பொருளாகும்.

புறச் சமயங்கள் ஆறாவன, உலோகாயதம், சௌந்திராந்திகம், யோகாசாரம், மாத்திமீகம், வைபாடிகம், ஆகருதம் ஆகும்.

**முத்திக்கு வித்து உன் அடியார்கள் சிந்தை**
**முளரிக்க ருக்கன் மொழியெண்ண**
**சித்திக்கு மூலம் தவயோகி கட்குத்**
**தெளிகன்னல் ஊறும் அமிர்தம்**
**பத்திக்கு நித்தம் அருள்வீசு கொண்டல்**
**களவீசன் எங்கள் பரமன்**
**அத்திக்கு முன்னம் வரமேய ளித்த**
**கருவேசன் அம்பொன் அடியே. 54**

*பொருள்:* திருக்களா நிழலில் எழுந்தருயிருக்கின்ற இறைவனும், எங்கள் கடவுளும் வெள்ளை யானைக்கு முன்னர் வரம் தந்து அருளியவனும், திருக்கருவையில் எழுந்தருளியவனும் ஆகிய ஈசனது அழகிய பொன் போலும் அரிய திருவடி மோட்ச நிலத்துக்கு ஒருவிதை, கருதும் அடியவர்களின் சிந்தையாகிய தாமரை மலர்தற்கு ஒரு சூரியன், கூறும் அட்டமா சித்திக்கும் காரணம். தவசிகளுக்கும், சிவயோகிகளுக்கும் தெளிந்த கருப்பஞ்சாறும், ஊறி வரும் அமிர்தமும், அடியவர் செய்யும் பக்திக்குக் கருணை மழை பொழியும் மேகம்.

தொழும்பினாலும், தவத்தினாலும், யோகத்தினாலும், பக்தியினாலும் முறையே சிவபெருமானின் அடிக்குப் பாத்திரரான அடியார், தவசியர், யோகியர், பக்தர் என்னும் இத்திறப்பட்டோருக்குச் சிவபெருமான் திருவடி இத்திறப்படும் என்பது இச்செய்யுள். அடியார்கள் முதலிய அனைவரும் விழைவது முத்திப்பேறே ஆதலின் அம்முத்திப் பேற்றிற்கு மூலமாய் இருப்பது திருவடி என்பதை முதலில் கூறினார். தவயோகிகள் என்பதைக் கபில பரணர் என்பது போலக் கொள்ளலாம். தவசிகளுக்கும், யோகிகளுக்கும் முறையே கன்னலும்,

அமிர்தமுமாய் எனப் பொருள்படுதலின் இது நிரனிறைப் பொருள்கோள். திருவடிக்கு உவமை அவரவர் தன்மைக்கு ஏற்ப வேறுபடுமாறு கூர்ந்து நோக்கிக் கண்டு கொள்க. தெளிகன்ன லூறுமிர்தம் எனபதும் பாடம்.

எண் சித்திகளாவன, அணிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம், திருவடி ஒன்றினையே பலவாக உருவகம் செய்தமையால் இது ஏகாங்க உருவணி எனப்பட்டது.

*முளரி – தாமரை, அருக்கண் – சூரியன், கன்னல் – கரும்பு, ஈண்டு தெளி என்னும் அடையால் கரும்பின் இரசத்தைக் குறித்தது. கொண்டல்–மேகம், அத்தி–யானை.*

**அடியா ரிழைத்த பிழைகோடி நெஞ்சின்**
**அறியாத ஆதி முதல்வன்**
**கொடியார் புரத்தை அழல்மூட அன்று**
**குறுமூரல் கொண்ட குழகன்**
**நெடியோன் வழுத்து களவீசன் என்று**
**நினைதோறும் உள்ளம் நெகிழ**
**முடியேறும் அங்கை புளகிக்கும் மேனி**
**முகிழிக்கும் என்கண் இணையே. 55**

***பொருள்:*** தன் அடியவர்கள் செய்த அளவில்லாதப் பிழைகளைத் தன் திருவுள்ளத்தில் எண்ணாத ஆதியாகிய முதல்வன், தம் அடிமைத் திறத்தினின்றும் மாறுபட்ட கொடியவர் திரிபுரத்தை அக்கினி சூழும்படி, புன்னகை அரும்பிய பேரழகுடையவன், திருமால் துதிக்கும் திருக்களா நிழலில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன். என்று நினைக்குந்தோறும் என் மனம் இளக, உள்ளங் கைகள் என் தலைமீதேறிக் குவியும், உடல் புளகங் கொள்ளும், என் இரண்டு கண்களும் குவியும்.

பக்தி மேலீட்டால் உள்ளம் நெகிழ்ந்து போதலும், கைகுவிதலும், மேனி சிலிர்த்தலும், கண் இமைகள் சோர்ந்து குவிதலும் இயல்பாதல் அறிக. மேனி சிலிர்த்தல் முதலிய போல கைகுவிதலும் பக்தி மேலீட்டால் தன் குறிப்பின்றி நிகழுமாயின் முடியேறும் அங்கை என்றார்.

*குறுமூரல் - புன்னகை, குழகன் - சிவபெருமான், குழகம்-அழகு, புளகிக்கும்-சிலிர்க்கும், முகிழிக்கும் - முகிழ்க்கும், குவியும்.*

**என்கண் ணிடத்தின் அகலாத செல்வன்**
**எழிலார் களாவின் முதல்வன்**
**வன்கண் ணர்நெஞ்சு புகுதாத நம்பன்**
**மனமாச றுத்த பெருமான்**
**புன்கண் அகற்றி அடியாரை வீடு**
**புகுவித்து நின்ற புனிதன்**
**தன்கண் எனக்கு முடியாத அன்பு**
**தாஎன்கொல் செய்த தவமே. 56**

*பொருள்:* என் அகக்கண்ணின்றும் நீங்காத ஞானச் செல்வனும், அழகு நிறைந்த களாவின் நிழலில் எழுந்தருளிய முதல்வனும், பாவிகளின் நெஞ்சில் குடியேறுதல் சிறிதும் உணராத எப்பொருளுக்கும் தலைவனும், அடியேன் மனக்குற்றத்தை ஒழிக்கும் பெருமானும், பிறவித் துன்பத்தை ஒழித்து அடியவர்களை முத்தி வீட்டில் குடியேற்றி நின்றருளிய மலரகிதனுமாகிய இறைவன், தன்னிடத்து, அடியேனுக்கு அளவில்லா அன்பும் தந்தருள அடியேன் செய்த தவம் யாது ?

வன்கண்ணன் அன்பிற்குப் புறம்பாக நிற்கும் வன்னெஞ்சர், இறைவன் அன்பு வடிவினன் ஆதலால், அன்பிலார் உள்ளத்தில் விளங்கித் தோன்றான் என்பது பற்றி, வன்கண்ணன் நெஞ்சு புகுதாத நம்பன் என்றார்.

*வன்கண் - கொடுமை, புண்கண் - துன்பம், தன்கண் - தன்னிடத்து, எழில் ஆர் - அழகு பொருந்திய.*

தவமும் தவத்தின் உறுபேறு மான
தலைவாக ளாவின் முதலே
புவனங் களாவை உயிர்வர்க்க மாவை
நுகர்போக மாவை புகழும்
திவசங் களாதி வருகால மாவை
தெளிவார்தெ ளிந்த அமையத்
திவையன் றிநிற்பை எனின்ஐய நெஞ்சின்
எவரே மதிப்பர் உனையே. 57

*பொருள்:* அடியவர்கள் செய்யும் தவமும், அத்தவத்தால் வரும் பயனும் ஆகிய இறைவனே, திருக்களா நிழலில் எழுந்தருளிய தலைவனே. எல்லா புவனங்களும் ஆவாய், அவற்றில் உள்ள ஜீவராசிகளும் ஆவாய், அவ்வான்மாக்கள் நுகரும் போகங்களும் ஆவாய் சொல்லும் நாள் முதலாக வரும் கால தத்துவம் ஆவாய், உன்னை உணர்வார் உணர்ந்த நேரத்தில் இவைகளல்லாமல் நிற்பாய் என்றால் மனத்தில் கருதவல்லவர் யாவர்?

உலகம் முதலிய யாவும் தானே ஆகும் இறைவன் ஞானிகள் அறிவு தெளிந்து நிற்கும் அனுபவ நிலையில் உலகாதிகளின் வேறே தனித்துக் காணப்படுவன் என்று ஆகம நூல்கள் கூறுவதால் தெளிவார் தெளிந்த அமையத் திவையன்றி நிற்பவை என்றார்.

*ஆவை - ஆவாய், திவசம் - நாள், அமையம் - சமயம், ஐய-ஐயனே.*

உன்நாமம்ஓதி உனையேவ ணங்கி
உறுபூசை பேணும் உரவோர்
பொன்னா டளிக்க வரம்நல்கும் ஆதி
புனிதாக ளாவில் உறைவோய்

முன்னே உனக்கியான் அடியானும் அல்லன்
முழுஞானி அல்லன் எளியேன்
என்னே பிழைத்த பிழைகோடி உள்ள
எனிலும்பு ரத்தல் கடனே. 58

*பொருள்:* உன் திருநாமங்களை எடுத்துக்கூறி, உன்னையே மிகவும் பணிந்து பூசை செய்யும் ஞானிகள் பொன்னுலகத்தைக் காக்க வரம் தந்து அருளும் முதலாயுள்ள புனிதனே, களாநிழலில் எழுந்தருளிய இறைவனே, அறிவில் சிறியேனாகிய நான், முன்னமே தேவரீருக்குத் தொண்டு பட்டு ஒழுகுவேனும் அல்லேன். சிவஞானியும் அல்லேன், ஐயோ, உனக்கு எளியேன் செய்தபிழை கோடியுள்ளன ஆனாலும் என்னைப் பாதுகாத்தல் உன் கடனாம்.

ஈசனின் திருவடிகளை அடைவதற்கு அன்பும் அறிவும் அவசியம் வேண்டும். அன்பினாலும் அறிவினாலும் ஈசனின் அடிக்காட்படுவோரில் அன்பு அறிவுனும் மிகுந்து நிற்கப்பெற்றவர் பக்தரெனவும், அறிவு அன்பினும் மிகுந்து நிற்கப்பெற்றவர் ஞானிகள் எனவும் கூறப்படுவர். இவ்விருதிறத்தாருள் யான் ஒரு திறத்தாரினும் சேர்ந்தவனல்லேன் என்பார். அடியானுமல்லன் ஞானியுமல்லன் என்றார்.

கடவா ரணத்தின் உரிபோர்வை கொண்ட
கருவேச ஆதி முதல்வா
சடவா தனைக்குள் அவமேகி டந்து
தடுமாறு நெஞ்ச முடையேன்
அடைவாய் வழுந்தி வழிபாடு செய்துன்
அடிபேண ஒன்றும் அறியேன்
மடமால் அகற்றி யிடுமாற ளிக்கும்
வரம்நீ கொடுக்கும் வரமே. 59

*பொருள்:* மதத்தை உடைய யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டு கருவையில் எழுந்தருளி யிருக்கின்ற ஈசனே, ஆதியாகிய முதல்வனே, சடமாக உள்ள பொருள்களின் பழக்கத்துள் வீணே கிடந்து தடுமாறா நின்ற மனத்தையுடையேன். முறையாக உன்னைத் துதி செய்து தொண்டுபட்டொழுகி, உன் திருவடியை விரும்பச் சிறிதும் அறியேன். அதனால் அறியாமையாகிய ஆணவ மலத்தால் வரும் மயக்கத்தை அகற்றும் வண்ணம் கொடுத்தருளும் வரமே நீ அடி யேனுக்குக் கொடுக்கத் தக்க வரமாம்.

மடம்-அறியாமை, மால்-மயக்ம், அறிவை மறைத்து அறியாமையாகிய மயக்கத்தைச் செய்வது ஆணவ மலமே ஆதலின் மடமால் என்றது அறியாமையாகிய ஆணவ மலத்தால் வரும் மயக்கத்தை,

*கடம் - மதம், வாரணம் - யானை, உரி - தோல், சடம்-அறிவற்ற பொருள்கள், வாதனை - வாசனை - பழக்கம்.*

**வரையா தியற்றி யிடுபாவ காரி**
**மறமன்றி வேறு புரியேன்**
**விரைமா லைசுற்று குழலாரி டத்து**
**மிகஆசை வைத்து மெலிவேன்**
**கரையா திருக்கும் மனநீக ரைத்துன்**
**அடிபாட வைத்த கதைநான்**
**உரையால் நிறைக்க முடியாது முக்கண்**
**உடையாய் களாவின் ஒளியே. 60**

*பொருள்:* தீதினை நீக்காது அதனைச் செய்யும் பாவம் உடையேன். அப்பாவத் தொழில் அன்றி வேறு சிறிதும் செய்யேன். வாசமிக்க கூந்தலை உடைய பெண்களிடத்து மிகவும் ஆசை கொண்டு மெலியா நின்றேன். திரிநேத்திரங்களை உடையவனே! திருக்களா நிழற்கீழ் எழுந்தருளிய ஒளிப்பிழம்பே, உருகாதிருக்கும்

என் மனத்தை நீ உருக்கி, உன் திருவடிகளைப் புகழ்ந்து பாடவைத்த கதையினை, நான் சொல்லால் அளவறுக்க ஒண்ணாது.

செய்ய வேண்டியது அறம் நீக்க வேண்டியது மறம் நானோ நீக்க வேண்டியதையே செய்கின்றேன். செய்ய வேண்டியதை ஒரு சிறிதும் செய்கின்றிலேன் என்றார். வரையா தியற்றியிடுபாவ காரி மறமன்றி வேறு புரியேன் என்றார். விரைமாலை சுற்று குழலார் என்றதால், ஆடவரை மயக்கித் தம் வலையில் சிக்குவிப்பதே நோக்கமாகக் கொண்டு தம்மை நறுமலர் ஆகியவற்றால் அலங்கரித்துக் கொள்ளும் பரத்தையரே இங்கு சுட்டப்பெற்றனர்.

*வரையாது – நீங்காது, பாவகாரி – பாவமுடையேன், மறம்–பாவம், விரை – வாசனை.*

## ஏழாம் பத்து

**முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களாகவும் மற்றைய நான்கும் மாச்சீர்களாகவும் வந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**ஒளிமதி முடித்த வேணி**
**ஒருவனே கருவை யானே**
**தெளிவுறா நெஞ்சந் தன்னைத்**
**தெருட்டிநின் நிலையைக் காட்டி**
**அருளினா லென்னை யாண்ட**
**அருட்குன்றே உன்னை யின்னும்**
**எளியனேன் பிறவி வேட்டோ**
**ஏத்திடா திருக்கின் றேனே. 61**

*பொருள்:* ஒளிமிக்க இளம் சந்திரனை அணிந்த சடாமுடியினை உடைய ஒருவனே, திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, தெளியாத என்மனத்தைத் தெளியச்செய்து, நீ அருளும் நிலையை காட்டித்

திருவருளினால் என்னை அடிமை கொண்ட கருணை மலையே, இன்னும் எளியேன், பிறவியை விரும்பியோ உன்னை வணங்காது இருக்கின்றேன்.

*தெருட்டி-அறிவுறுத்தி, வேட்டு-விரும்பி, வேள்-பகுதி.*

**இருக்கினும் நிற்கும் போதும்**
**இரவுகண் துயிலும் போதும்**
**பொருக்கென நடக்கும் போதும்**
**பொருந்தியே துய்க்கும் போதும்**
**முருக்கிதழ்க் கனிவா யாரை**
**முயங்கிநெஞ் சழியும் போதும்**
**திருக்களா வுடைய நம்பா**
**சிந்தையுன் பால தாமே. 62**

*பொருள்:* இருக்கும்பொழுதும், நிற்கும் பொழுதும், இரவில் உறங்கும் பொழுதும், விரைந்து நடக்கும் பொழுதும், அறுசுவையுடன் உணவு உண்ணும் பொழுதும், முருக்க மலர் போன்ற இதழையும், கனி வாயினையும் உடைய பெண்களைக் கூடி மனமழியும் பொழுதும், திருக்களா நீழலில் எழுந்தருளி இருக்கின்ற இறைவனே, அடியேனின் மனம் உன்னிடத்ததாம்.

ஓரிடத்தில் அமர்ந்து இறைவனைச் சிந்தித்தலினும் நின்று கொண்டு சிந்தித்தல் அரிது, அதனினும் அரிது படுக்கையில் கிடந்து சிந்தித்தல், அதனினும் அரிது நடந்து கொண்டு சிந்தித்தல், அதனினும் அரிது சுவைப்புலன் வழியே மனத்தைச் செலுத்தி உணவு கொள்ளும்போது சிந்தித்தல், அதனினும் அரிது ஐம்புலன்களையும் காம நுகர்ச்சியில் செலுத்தி மனம் அழிந்து நிற்கும்போது இறைவனைச் சிந்தித்தல்

இவ்வாறு ஒன்றின் ஒன்று அருமையுடைத்தாதல் பற்றி அம்முறையே கூறினார். எத்தொழிலைச் செய்தாலும் ஏதவதத்தைப் பட்டாலும் சிந்தையை சிவன்பாலே வைத்தல் அவன் அடிக்கு அன்பிலாதவழி இயலாது ஆகலின் உன் திருவடிமீதன்புடையேன் என்பது கருத்தாகும். அதனாலேயே சிற்றின்பத்துழலும் சிறியேனும் யான் நின் திருவடி சாரும் பேரின்பப் பேற்றுக்கு உரியனாவேன். என்றாராம் என்னை? இறைவனடிக்கு இடையறாத அன்புடையார் எந்நிலையிலும் நின்றாலும் இறைவனடி சார்வர் என்பது நூல்களின் துணிபாகும்.

**சிந்தனை உனக்குத் தந்தேன்**
**திருவருள் எனக்குத் தந்தாய்**
**வந்தனை உனக்குத் தந்தேன்**
**மலரடி எனக்குத் தந்தாய்**
**பைந்துணர் உனக்குத் தந்தேன்**
**பரகதி எனக்குத் தந்தாய்**
**கந்தனைப் பயந்த நாதா**
**கருவையி லிருக்குந் தேவே. 63**

*பொருள்:* முருகக் கடவுளைத் தந்தருளிய இறைவனே, திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, நான் என் மனத்தை உனக்குக் கொடுத்தேன். நீ உன் திருவருளினை எனக்குத் தந்தருளினாய், வணக்கத்தை உனக்குத் தந்தேன், தாமரை மலர் போன்ற திருவடியை எனக்குத் தந்தருளினாய், பசிய பூங்கொத்தினை உனக்குத் தந்தேன், முத்தியை எனக்குத் தந்தருளினாய்.

தெய்வம் ஒன்று உண்டு என்று உணர்ந்து சிந்திக்கும் அளவும் திருவருள் வெளிப்பட்டுத் தோன்றாதாகலின்

சிந்தனை உனக்குத் தந்தேன், திருவருள் எனக்குத் தந்தாய் என்றார். அவனை வணங்குதற்கும் அவன் அருளே காரணம். ஆதலினாலும் அடியார் வணங்குதற்கு உரியது இறைவன் திருவடியே ஆதலினாலும் திருவருள் பெற்றமை கூறியபின் வந்தனை உனக்குத் தந்தேன் மலரடி எனக்குத் தந்தாய் என்றார். இறைவன் திருவடிக்கு அடியார் செய்யத்தக்கது அர்ச்சனையேயாதலானும் அடியார் விழையும் முத்திப்பேறு இறைவனின் திருவடியில் கலத்தலே ஆதலாலும் திருவடி பெற்றமை கூறியபின் பைந்துணருனக்குத் தந்தேன் பரகதியெனக்குத் தந்தாய் என்றார்.

**தேவனே நின்னை யல்லாற்**
**பிறிதொரு தேவை எண்ணேன்**
**பாவனை நின்னி னல்லாற்**
**பிறிதொரு பற்று மில்லேன்**
**யாவையுங் காட்டக் கண்டேன்**
**என்னுளே நின்னைக் கண்டேன்**
**காவலா கருவை யானே**
**இனிமற்றோர் காட்சி யுண்டோ? 64**

*பொருள்:* தேவனே, உன்னையன்றி மற்றொரு தெய்வத்தை ஒரு பொருளாகக் கனவில் கூட கருத மாட்டேன், உன்னை அல்லாமல் வேறொரு பாவனை பற்றுதலும் இல்லேன். உன்னுடைய தன்மை அனைத்தையும் நீயே உணர்த்த உணர்ந்தேன். என் இதயத்தே உன்னை தரிசித்தேன். அனைத்துயிர்களையும் காப்பதில் வல்லவனே, திருக்கருவையில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனே, இனி இத்திருக்காட்சியின்றி வேறொரு காட்சியும் உளதோ ?

கேள்வியாலும் ஆராய்ச்சியாலும் சிவபெருமான் ஒருவனே தெய்வம் என்று உணர்ந்தமையால் பிறிதொரு தேவையெண்ணேன் எனவும் பிறிதொரு பற்றுமில்லேன் என்றும் கூறினார்.

***காவலன் – காத்தலில் வல்லவன், தலைவன்.***

**உண்டென மறைக ளோதும்**
**ஒருதனி முதலே நாளும்**
**அண்டரும் முனிவர் தாமும்**
**காண்கிலர் அடியேன் உன்னைத்**
**தெண்டிரை வளாகம் முற்றும்**
**தேடினேன் தேடித் தேடிக்**
**கண்டனன் களாவி னீழல்**
**கருவைமா நகரத் தானே. 65**

***பொருள்:*** கருவையென்னும் பெருந்திருநகரில் வாழ்பவனே, வேதங்கள் உண்டென்று ஒப்பில்லாத தனி முதல்வனே, எந்நாளும் தேவர்களும் முனிவர்களும் உன்னைக் கண்டறிகிலர். நாயிற் கடைப்பட்டேனாகிய யான் உன்னைக் கடல் சூழ்ந்த உலக முற்றும் தேடினேன், அங்கு உன்னைத் தேடிக்காணாது, திருக்களா நிழலில் உன்னை தரிசித்தனன்.

எஞ்ஞான்றுமுள்ள உண்மைப் பொருள் ஒன்று உண்டு என மறைகள் முழங்குவது கண்டு உண்டென மறைகளோதும் ஒரு தனி முதலே என விவரித்தார். அவன் ஒருவனே தனிமுதலாவதுணர்ந்தும், அகங்காரத்தால் தம்மை வேறு பிரித்துத் தாம் அவனைத் தம்மின் வேறாகக் கண்டுவிடலாம் என்று எண்ணித் தேட முயன்ற அயனும் மாலும் அவனைக் காணமாட்டாமல் அயர்ந்தமை கருதி அண்டரும் முனிவர் தாமும் காண்கிலர் என்றார்.

அவர்களைப் போல் நான் அகங்கரித்து உழலாமல் உன்னுள் அடங்கிய அடியனாக நின்று உன்னைக் காண முயன்றேன் ஆயினும் எங்கும் நிறைந்த உன்னை அந்நிலையில் காண்பது என் சிற்றறிவிற்கு அமையாது என்பதை உணராமல் ஒரு குறியற்று உலகம் எங்கும் தேடி உழன்றேன் என்பார். அடியனேன் உன்னைத் தெண்டிரை வளாக முற்றுந் தேடினேன் என்றார். அவ்வாறு தேடி உழன்றும் காணாமையால் சிற்றறிவினேனாகிய நான் நின் பெருநிலையை ஒரு மூர்த்தத்திற்கு கொண்டு வழிபட்டா லன்றிக் காணமுடியாது என்னும் உணர்வு பெற்று அவ்வாறே வழிபட்டுக் கண்டேன் என்பார். தேடித் தேடிக் கண்டனன் களாவினீழல் என்றார்.

*தெண்டிரை (தெள்+திரை) - தெளிந்த நீரை யுடையதும், அலைவீசுவதுமான கடல், திரை - அலை, வளாகம் - வளைந்த இடம், சூழ்ந்த இடம், கடலால் சூழப்பெற்ற இடம், உலகம்.*

**தானென உருவ மாகிச்**
**சங்கற்ப விற்பங் கொண்டு**
**வானக மாகி மண்ணாய்க்**
**கடல்களாய் மலைக ளாகி**
**ஈனமாம் மனப்பேய் செய்த**
**இந்திர சாலந் தன்னால்**
**நானுனை யுணர மாட்டேன்**
**களாநிழல் நண்ணு வானே. 66**

*பொருள்:* திருக்களா நிழலில் எழுந்தருளியிருக் கின்ற இறைவனே, இழிந்த என் மனமென்னும் பேய், எல்லாப் பொருளும் தான் என்னும் வடிவமைந்து, சங்கற்பத்தையும் விகற்பத்தையும் கொள்ளுதலால், விண்ணுலகமாகியும், மண்ணுலகமாகியும், கடல் களாகியும், மலைகளாகியும் செய்த இந்திர ஜாலத்தினால் நான் உனது இயல்பை அறியாது இருந்தேன்.

யான் வேறு, என் காட்சிக்கட்படும் மாயா காரியமாகி மண் முதலிய பஞ்ச பூதங்களாலான இவ்வுலகம் வேறு, எனக்கும் என்னைப் பற்றிய மாயைக்கும் இடம் தந்து யாண்டும் என்றும் வியாபக மாகி மாயையினை முதற்காரணமாகப் பயன்படுத்தல் அல்லது அதனோடு பற்றிலதாகி உலகிற்கு நிமித்த காரணமாகி என்னை ஆண்டருளும் இறைவன் வேறு அந்த அருளுடைய பரமென்றோ அன்றே நானுளன், எனக்கே ஆணவாதி பெருகுவினை கட்டென்று அருணூல் கூறிய முப்பொருள் உண்மை உணராமல் யானே யாவும் என்னும் மாயாவாதப் பித்துரையில் மயங்கி உன்னை உணரேனாயினேன் என்பார். ஈனமாம் மனப்பேய், தானென உருவமாகிச் செய்த இந்திர சாலந்தன்னால் நானுனை உணரமாட்டேன் என்றார்.

**நண்ணருங் தவங்கள் செய்து**
**நானுடல் வருந்த மாட்டேன்**
**எண்ணுமைம் புலனுஞ் செற்றங்**
**கிருவினை யறுக்க மாட்டேன்**
**கண்ணகன் ஞாலம் போற்றக்**
**களாநிழ லமர்ந்து வாழும்**
**அண்ணலே இனியெவ் வாறோ**
**அடியனேன் உய்யு மாறே ?** **67**

*பொருள்:* கிட்டுதற்கரிய தவங்களைச் செய்து, நான் சரீரம் வருந்தமாட்டேன். ஐம்புலன்களையும் அழித்து, அதனால் விளையும் நல்வினை தீவினைகளை வேரோடு அறுக்கமாட்டேன். பரந்த நிலவுலகு துதிக்க, திருக்களா நிழலில் விரும்பிவாழும் இறைவனே, அடியேனாகிய நான் இனிப் பிழைக்கும் வகை எவ்வகை ?

ஆன்மாவைப் பிறவியில் கட்டுப்படுத்தலில் நல் வினை பொன் விலங்கும், தீவினை இரும்பு விலங்கும்

போன்றது ஆதலின், இருவினை அறுக்கமாட்டேன் என்றார்.

*சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவை ஐம்புலன்கள் ஆகும். நண்ணரும் - கிட்டுதற்கரிய, செற்று - அழித்து, கண்அகல்-இடம் அகன்ற.*

**உய்யவோ ருறுதி நாடா**
**உலகினிற் சமய மென்னும்**
**வெய்யஆர் கலியின் வீழ்ந்து**
**வெந்துய ருழக்கின் றேற்குத்**
**தையலோர் பாகம் வைத்துக்**
**தண்டமிழ்க் கருவை வாழும்**
**ஐயன்வந் தாண்டு கொண்ட**
**ததிசயம் விளைக்கு மாறே. 68**

*பொருள்:* கடைத்தேற ஒரு பற்றுக்கோட்டை நாடி, உலகில் வழங்கும் புறச்சமயங்கள் என்னும் கொடிய கடலில் வீழ்ந்து அழுந்தி, கொடிய துன்பத்தில் வருந்து கின்ற எனக்கு உமையம்மையினை இடப்பாகத்தில் வைத்துத் தமிழ் வழங்கும் திருக்கருவைப் பதியினில் வாழும் இறைவன் எழுந்தருளி வந்து என்னை அடிமை கொண்ட செய்தி, நினைக்குந் தோறும் அதிசயத்தை விளைக்கும் வகையதாம்.

*உய்ய - கடைத்தேற, உறுதி-பற்றுக்கோடு, நாடா-நாடி, வெய்ய-கொடிய, ஆர்கலி-கடல், வெம்-கொடிய, உழக்கின்றேற்கு-வருந்துகின்றவ னாகிய எனக்கு. ஆறு - வகை.*

**அதிசய முளத்திற் காட்டி**
**அகம்புறந் தானாக் காட்டித்**
**துதிசெயக் கவிநாக் காட்டித்**
**தொடக்கறா நேயங் காட்டி**

மதியினிற் களிப்புங் காட்டி
வந்தெனை யாண்டு கொண்டான்
கதியென வுலகம் போற்றக்
களாநிழ லமர்ந்த நாதன். 69

*பொருள்:* புகலிடம் என்று அறிந்து உலகு துதிக்கக் களா நிழலில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன், என் மனத்தில் அதிசயத்தைக் காட்டி உள்ளும் புறமும் தானாகவே நிற்கும் நிலைமையைக் காட்டி, கவியால் துதிசெய்ய நாவைக்காட்டி, இடையறாத அன்பினைக் காட்டி, மனத்தில் ஆனந்தக் களிப்பையும் காட்டி வந்து என்னை அடிமை கொண்டான்.

தாம் உழந்த வெந்துயர், ஐயன் வந்தாண்ட அக்கணமே அகன்றதென்பது கருதி அதிசயம் உளத்திற் காட்டி என்றார். சிவபெருமான் எள்ளில் எண்ணெய் போல உள்ளும் புறமும் தானேயாய் நிறைந்து நிற்கும் பெற்றிமையை அவனருளே கண்ணாகக் கண்டேன் என்பார். அகம் புறம் தானாகக் காட்டி என்றார். திருவருளே சித்குணமாகக் கொண்டவன் என்பார் மேல் தையலோர் பாகம் வைத்து வாழுமையன் ஆண்டு கொண்டான் என்றதற்கேற்ப இங்கு தொடக்கறா நேயங்காட்டி ஆண்டு கொண்டான் என்றார். என் பிறவித் துன்பத்தை நீக்கிப் பேரின்ப உணர்ச்சி தந்தான் என்பார். சிந்தையிற் களிப்புங் காட்டி என்றார்.

நாதனே கவிஞன் ஏவ
நள்ளிருட் போதிற் சென்ற
தூதனே இமய வல்லி
துணைவனே கருவை யானே
போதநே யத்தி னால்நின்
பொலன்கழற் றொண்டு பூண்டும்
ஏதம்நீ அகற்றி டாமல்
இருப்பதும் இசைய தாமோ. 70

***பொருள்:*** இறைவனே, ஒரு கவிஞனான உன்னை ஏவ, நடு இராத்திரியில், பரவையார் பால் சென்ற தூதுவனே. இமய மலையில் தோன்றிய உமையம்மையின் கேள்வனே. திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே. சிவஞானத்தின் வழிவந்த அன்பினால் உன் பொன் போலும் அரிய திருவடிக்கு, அடியேன் அடிமை பூண்டும், நீ என் மலக்குற்றத்தை ஒழிக்காமல், வாளா இருத்தலும் உனக்கு புகழாகுமோ ?

ஒரு கவிஞன் ஏவல் வழிநின்று ஒரு பெண்மகள் பால் தூது சென்றமையால் அவன் இறைமைக் குணமும் பழுதுபடுமாறில்லை என்பதை முன்னர் அறிவிக்க வேண்டி, தூது போனதைக் குறிப்பிடுதற்கு முன்னே நாதனே என்றார். நாதன் - இறைவன். அவ்வாறு தூது சென்றது தன்னோடு பிரிவற நிற்கும் திருவருளின் பெருந்தகைமையால் என்பது தோன்ற தூதனென்றதை அடுத்து இமயவல்லி துணைவனே என்றார். சுந்தரர் உன்னைப் பாடுதல் ஒன்றே செய்தார்.

உன்னை ஒரு பெண்மகள்பால் தூது செல்ல ஏவினார். அவருக்கு அருள் செய்தனை நீ, யானோ உன்னைத் துதிக்கின்றேன். உன் திருவடிக்குத் தொண்டு பூண்டு ஒழுகுகின்றேன். உன்னை ஏவிப் பணி கொள்வேன் அல்லேன். என் பாசத்தை அகற்றி என்னை ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன். எனக்கு அருள் செய்யாமல் இருப்பது உன் பெருந்தன்மைக்கு அழகாகுமோ என்பார். இசையதாமோ என்றார்.

***நள்ளிருள் – நடு இரவு, இமயவல்லி – இமய மலையில் தோன்றிய கொடி போன்றவளாகிய உமாதேவி, துணைவன் – கேள்வன் – கணவன், போதும் – ஞானம், பொலன்கழல் – பொன்போலும் திருவடிகள். ஏதும் – குற்றம். இசை – புகழ்.***

## எட்டாம் பத்து

**முதற்சீரும் மூன்றாம் சீரும் மாச்சீர்களாகவும் மற்றைய இரண்டும் விளசீர்களாகவும் வந்த கலி விருத்தம்**

**இசையுஞ் செல்வமுந் திருவு மின்பமும்**
**அசைவி லாதபே ரறிவு முத்தியும்**
**விசைய முத்தருங் கருவை மேவினோன்**
**திசையு டுத்தவன் சீர்ப டிக்கவே. 71**

*பொருள்:* திருக்கருவையில் எழுந்தருளினவனும், திக்கினை ஆடையாக உடுத்தவனும் ஆகிய இறைவனின் புகழைப் பாட, செல்வத்தையும், பொலிவினையும், புகழினையும், இன்பத்தையும், வெற்றியையும் கம்பித்த லில்லாத சிவஞானத்தையும் மோட்சத்தையும் தரும்.

இறைவன் பொருள்சேர் புகழ் உடையவன் ஆதலால் அவன் சீர் படித்தலால் மெய்ப்புகழ் அடைவது திண்ணம், பூவோடு சேர்ந்த நார் மணம் பெறுதல் திண்ணம் ஆதல்போல, புகழுடையார் செல்வம் அடைதலும், செல்வம் உடையவர் இன்பம் அடைதலும், இன்ப முடையவர்க்கு அறிவு கலக்கமற்றுத் தெளிந்து விளங்கலும் இயற்கை. அறிவானன்றி முத்திப் பேறு கிட்டுவதில்லை. முத்தியின் வருவதே வெற்றி உணர்ச்சி. தன்னை அலைத்த பாசத்தை வேரறுத்த நிலையே முத்தியாகும்.

படிய ளந்தவன் பதும மேயவன்
அடிமு டித்தலம் அறியொ ணாதவன்
கடிகொண் மாமலர்க் களவி னீழலான்
குடியி ருக்கவென் நெஞ்சு கோயிலே. 72

*பொருள்:* நிலவுலகினை அளந்த திருமாலாலும், தாமரை மலரில் வசிக்கும் பிரமனாலும் தனது திருவடித் தலமும், திருமுடித்தலும் அறிதற்கரியவனும், வாசம் நிறைந்த வண்டுகள் மொய்த்த மலர்களை உடைய திருக்களா நிழலில் எழுந்தருளினவனுமாகிய இறைவன் என் நெஞ்சத் திருக்கோயிலாகக் குடியிருக்கக் கடவன்.

உயிர்களின் உள்ளத்தில் இறைவன் இடையறாது உறைவானாயினும் அப்பெற்றி உணர்ந்து அவனை வழிபடுவோர்க்கு அன்றி அவன் அருள் வெளிப்பட்டுத் தோன்றாது ஆதலின் குடியிருக்க என் நெஞ்சு கோயிலே என்றார். மா என்னும் பல பொருள் ஒரு சொல் மலரென்னுஞ் சார்பால் வண்டின் மேல் நின்றது.

**கோயில் சூழவுங் குடங்கை கொட்டவும்**
**வாயிற் பாடவும் வணங்கி யாடவும்**
**ஆயிரம் பெயர்க் கருவை யாதிபன்**
**நேய முற்றுவாழ் தொண்டர் நேர்வரே. 73**

*பொருள்:* ஆயிரம் திருநாமங்களை உடைய, திருக்கருவையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனின் திருவடிக்குக் கீழ் நேயம் மிகுந்து வாழும் அடியார், அவனின் திருக்கோயிலை வலம் வரவும், உள்ளங்கை கொட்டவும், திருவாயிலினின்று பாடவும். அவனை வணங்கி ஆடவும் உடன்படுவார்.

குடங்கை கொட்டல் முதலாயின பக்திப் பெருக்கால் திகழ்வன. கை முதலிய அவயங்களாகவும், மெய்யாலும் ஆய பயன் இறைவனை வணங்குதலே என்று கொண்டவர் தொண்டர் ஆதலின், தொண்டர் நேர்வர் என்றார்.

***குடங்கை - உள்ளங்கை, நேர்வர் - ஒப்புவர் என்பதாகும்.***

**நேர்ந்த நெஞ்சமே நெடிது வாடிநீ**
**சோர்ந்த துன்பமுந் துயரும் போக்குவான்**
**வார்ந்த செஞ்சடைக் கருவை வானவன்**
**ஆர்ந்த பேரருள் அருவி யாடவே. 74**

*பொருள்:* வேண்டிய மனமே, (உன் வாட்டத்தையும், சோர்வையும் போக்கும்படி) நீண்ட சிவந்த சடையினை உடைய இறைவனின் வற்றாத பெரிய அருளாகிய அருவியில் நீராட, நீ மிகவும் வாடுதற்கும், சோர்தற்கும் காரணமான துன்பத்தையும் வருத்தத்தையும் அவன் போக்கி அருள்வான்.

நீ நெடிது வாடிச் சோர்ந்த என்க. வாடிச் சோர்ந்த என்பதனை வாடிச் சோர்வதற்குக் காரணமான என நோய் தீர்த்த மருந்து என்பது போல் கொள்க. நெடிது வாடிச் சோர்ந்த நீ என்றும் அமையும். இப்பொருட்டு உன் வாட்டத்துக்கும் சோர்வுக்கும் காரணமான என எச்சங் கொள்க. துன்பமாவது தான் பெற்ற ஒன்றை இழந்த காலத்தும், முயன்றதொரு பொருள் கிடைக்காத காலத்தும் தோன்றுவது, அதனைத் துன்பம் என்னும் பெயர்க்காரணத்தால் உணர்க.

**ஆடு மட்கலத் திகிரி யொத்தலைந்**
**தோடு நெஞ்சமுங் கவலை யோர்ந்துனை**
**நாடு மோதமிழ்க் கருவை நம்பனே**
**ஏடு சேர்மலர்க் களவில் ஈசனே. 75**

*பொருள்:* முத்தமிழ் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே, இதழ் செறிந்த மலர்களை உடைய திருக்களாவின் நீழலில் எழுந்தருளிய பெருமானே. மட்கலத்தைச் செய்யும் குயவனின் சுழன்றாடும் சக்கரத்தினை ஒத்து விடயங்களில் அலைந்து

செல்லும் என் மனமும், கவலையினைச் சீர்தூக்கி, அதனைப் போக்க உன்னைச் சரணடையுமோ ?

*திகிரி-சக்கரம். மட்கலத்திகிரி, மட்கலத்தை அமைக்கும் சக்கரம் என உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக் கொள்க. மட்கலம் என்பது மண்ணால் ஆகிய குடம் என உருபும் பயனும் உடன்தொக்கு தொகையாம். ஒகாரம் வினாப் பொருட்டு, ஒத்து, ஓர்ந்து-இறந்த கால வினையெச்சங்கள்.*

**ஈச னேஇடத் திமய வல்லியின்**
**நேச னேயியற் கருவை நித்தனே**
**பூசி யேனுனைப் புனித ஆகமம்**
**வாசி யேன்பிறப் பென்று மாயுமே. 76**

*பொருள்:* எல்லாவற்றையும் ஆள்பவனே, இடப் பாகத்தில் உள்ள உமையம்மையினிடத்து அன்புள்ள வனே, ஒழுங்கமைந்த கருவையில் எழுந்தருளிய நித்தனே. உன்னை பூசித்திடேன். தூய சிவாகமத்தை வாசித்தல் செய்யேன். எக்காலத்து என் பிறவி ஒழியும் ?

உயிர்களின் இடத்தில் கருணை உள்ளான் என்பார் இடத்திமய வல்லியின் நேசனே என்றும், என்றும் அழிதல் இல்லாதவன் என்பார் நித்தனே என்றும் கூறினார். வேதம் பசு, அதன்பால் நல்லாகமம் என்பவராதலின் புனித ஆகமம் என்றார். பூசியேன் என்பதால் பத்தியில்லேன் என்றும், ஆகமம் வாசியேன் என்பதால் ஞானமில்லேன் என்றும் கூறினராவர். சிவபத்தியும் சிவஞானமுமே பிறவியினை அறுக்க வல்லனவாதலால் அவை இரண்டும் இல்லேற்குப் பிறப்பென்று மாயுமே என்றார்.

**பிறவி மாயவும் அருள்பெ ருக்கவும்**
**துறவி யாய்வனம் துன்னல் வேண்டுமோ?**
**இறைவன் எம்பிரான் களவில் ஈசனென்று**
**அறையும் முன்னமே அனைத்தும் எய்துமே. 77**

***பொருள்:*** தலைவன் என்றும், எமது பெருமான் என்றும், திருக்களா நீழலில் எழுந்தருளிய ஈசனென்றும் சொல்வதற்கு முன்னமே எல்லா நன்மைகளும் வந்து கைகூடும். அவனுடைய திரு அருள் பெருகச் செய்யவும், பிறப்பு ஒழியவும், துறவறத்தை உடையவனாய்க் காட்டில் தவஞ்செய்ய ஒருவன் சொல்ல வேண்டுமோ ?

திருவருளா லன்றிப் பிறவி மாயுமாறில்லை யாதலின், அருள் பெருக்கவும் பிறவி மாயவும் என முறை மாற்றிப் பொருள் கொள்க. துறவியாய் வனம் துன்னல் வேண்டுமோ என்றது, ஈசன் அடிக்கு அன்பின்றி இல்ல முதலாயவற்றைத் துறந்து வனம் சேர்தலால் பயனில்லை. அவனடிக்கு அன்பின்றித் துறக்கும் துறவு புறத்துறவு ஆகுமேயன்றி அகத்துறவு ஆகாது.அவனடியைப் பற்றின் அவனருள் தோன்றி அதுவே பிற பற்றுக்களை அறுத்துப் பிறவியை மாய்த்துப் பேரின்பப் பேற்றினை நல்கும் ஆதலின் ஈசன் என்றறையும் முன்னமே அனைத்தும் எய்தும் என்றார். அறையும் முன்னமே என்றது விரையும் தெளிவும் பற்றி.

***துன்னல் – சேர்தல், அறைதல் – சொல்லுதல்.***

**எய்தி என்செயும் கருவை எம்பிரான்**
**கொய்யும் நாண்மலர்க் கொன்றை வேணியான்**
**செய்ய பாதம்என் சென்னி வைக்கவே**
**வெய்ய கூற்றுவன் வீசு பாசமே. 78**

***பொருள்:*** திருக்கருவையில் எழுந்தருளிய எமது பெருமானும் கொய்தற்கு உரிய அன்றலர்ந்த கொன்றை மலர் மாலையினை அணிந்த சடாமுடியினை உடையவனுமாகிய இறைவன். தன் சிவந்த திருவடிகளை என் சிரத்தில் சூட்டுவதால், கொடிய எமன் வீசா நின்ற பாசம் என்னை அடைந்து யாது செய்யும் ?

கொய்யும் நாண் மலராவது, கொய்யப்படும் தன்மையை உடைய நாண்மலர். மலநீக்கத்தில் திருவருட் பதிவு செய்தன என்பார் செய்யபாதமென் சென்னி வைக்க எனவும், அத்தகு திருவருட்பதிவு வாய்ந்த என்னிடத்தில் எமனுக்கு வேலை இல்லை என்பார். கூற்றுவன் பாசம் எய்தியென் செயும் எனவும் கூறினார். இச்செய்யுள் பூட்டுவிற் பொருள் கோள் உடையது.

*நாண் மலர் - புதிய மலர், அன்றலர்ந்த மலர், வேணி - சடை, கூற்றுவன் - காலன், எமன்.*

**பாசம் நீக்கிமூ வகைப்ப சுக்களை**
**மாசில் முத்தியாம் வனத்தில் மேய்த்திடும்**
**ஈசன் மின்னைநேர் இடைச்சி காதலன்**
**ஆசில் பால்வணத்து அண்டர் நாதனே. 79**

***பொருள்:*** மூவகை ஆன்மாக்களை, மலபந்தத்திலிருந்து நீக்கி, குற்றமில்லாத முத்தியாகிய சோலையில், ஈசனும், மின்னலை ஒத்த இடையை உடைய உமையம்மைக்கு அன்பனும், தேவர்களுக்குத் தலைவனும் ஆகிய, குற்றமில்லாத பால்போலும் நிறத்தினை உடைய இறைவன் பேரின்பம் துய்த்து மகிழும்படி சேர்ப்பான்.

மாடும், எருமையும், ஆடுமாகிய மூவகைப் பசுக்களையும் கட்டவிழ்த்துக் கொண்டு போய்க் குற்றமற்ற மூவகை யாகாக்கினி வளர்வதற்கு இடமாகிய காட்டில் அப்பசுக்களுக்குத் தலைவனும், மின்னற் கொடியினைப் போன்ற கோகுல மகளுக்குக் காதலனும், குற்றமில்லாத பாலமுதால் பொலிவு வாய்ந்த இடையர்களுக்குத் தலைவனும் ஆனவன் மேய்த்திடுவான்.

இப்பொருட்கு: பாசம் - கயிறு, முத்தீ முத்தியெனக் குறுக்கல் விகாரம் பெற்றது. வனம் - காடு, ஈசன் - தலைவன், மின்னல் இங்கு மகளின் தோற்றத்திற்கு உவமை ஆயிற்று. இடைக்கன்று, இடைச்சி- இடைமகள், அண்டர் - இடையர், பசுக்கள் மூவகை யாதலை நம்பியகப் பொருளில் முல்லைக் கருப்பொருள் கூறும்போது மூவின மேய்தல் என்று வருவது கொண்டறியலாம். இவ்வாறு சொற்கள் ஒரே வகையாய் நின்று இரு பொருள் பயத்தலின் இச்செய்யுள் செம்மொழிச் சிலேடை யணியுடைத்தால் காண்க.

*விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் ஆகியவை மூவகை ஆன்மாக்கள் எனப்படும். விஞ்ஞானகலர்- ஆணவ மலம் ஒன்றுமே உடையோர்,பிரளயாகலர்- ஆணவம், கன்மம் என்னும் இருமலம் உடையோர், சகலர்-ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களும் உடையோர். பாசம் உயிர்களை அநாதியே பற்றிய மும்மலங்கள். பாசம்-ஆன்மா, முத்தி- வீடுபேறு, வனம்-சோலை, மேய்த்திடும் என்பது இங்கு நுகரச் செய்யும் என்னும் பொருள். மின்னை நேர் இடைச்சி- மின்னலை ஒத்த இடையினை உடையாள் (உமாதேவி), ஆசு இல் - குற்றம் இல்லாத என்பனவாம்.*

**அண்ட கோளமும் அகில லோகமும்**
**மண்ட செந்தழல் வடிவ மானவன்**
**முண்ட கக்கழற் கருவை மூர்த்தியைக்**
**கண்ட கண்ணிணை களிது ளங்குமே. 80**

பொருள்: அண்ட கோளகைக்கு அப்புறத்திலும், எல்லா உலகங்களுக்கு அப்புறத்திலும், நிறைந்த செவந்த தீம்பிழம்பின் வடிவாய் அமைந்தவனாகிய, தாமரை மலர் போன்ற திருவடிகளை உடைய, திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனைத் தரிசித்த இரண்டு கண்களும் ஆனந்தக் களிப்பில் அழுந்தும்.

*அகிலம்-எல்லாம், மண்டு-நிறை, முண்டகம்-தாமரை, திருமால் பன்றியாகவும், பிரமன் அன்னமாகவும் சென்று திருவடியும் திருமுடியும் காணாது வருந்த அவர்களுக்கிடையே சோதித்தம்பமாய் நின்றோன் ஆனதால் செந்தழல் வடிவமானவன் என்றார்.*

## ஒன்பதாம் பத்து

**முதற்சீரும் ஈற்றுச் சீரும் மாச்சீர்களாகவும் மற்றைய இடை மூன்றும் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் வந்த கலி நிலைத்துறை**

**துளங்கு நெஞ்சமே துயருறா**
**வகையொன்று சொல்வேன்**
**வளங்கொள் செந்தமிழ்க் கருவையம்**
**பெரும்பதி மருவி**
**விளங்கு பானிற மேனியன்**
**திருவடி தொழுதால்**
**அளந்து காண்பருந் துறக்கவாழ்**
**விம்மையின் அளிப்பான். 81**

*பொருள்:* கலங்கும் மனமே நீ துன்பம் அடையாத வண்ணம் ஒரு செய்தி சொல்லாநின்றேன். வளம் அமைந்த செந்தமிழ் வழங்கும் திருக்கருவை என்னும் அழகிய பெரிய திருப்பதியில் எழுந்தருளி விளங்கா நின்ற பால்போன்ற வெள்ளிய நிறம் வாய்ந்த திருமேனியினை உடைய சிவபெருமானுடைய திருவடியை வணங்கினால், அளவு செய்து காணுதற்கு அரிய சொர்க்க வாழ்வினை இப்பிறப்பில் கொடுத்து அருளுவான்.

சிவபெருமான் திருவடித் தொண்டு பூண்டு ஒழுகுவோர்க்கு முத்தி வாழ்வு கிடைத்தல் ஒருதலை யாதலின் துறக்க வாழ்விம்மையின் அளிப்பான் என்றார்.

*துறக்கம் – முத்தியுலகம்.*

**இம்மை இன்பமும் இறுதியின்**
**முத்தியும் அளிக்கும்**
**நம்மை ஆளுடை நாயகன்**
**கருவைநன் னகரிற்**

**கொம்மை வெம்முலைக் கொடியொடும்**
**இனிதுவீற் றிருக்க**
**விம்மி மானுடர் வெந்துயர்**
**உழைப்பதென் விரகே. 82**

*பொருள்:* இப்பிறப்பில் இன்ப வாழ்க்கையினையும், முடிவில் முத்தினையும் கொடுத்து அருளுகின்றவனும், நம்மை ஆட்கொள்ளும் உரிமையுடைய பதியுமானவன் திருக்கருவை என்னும் நல்ல நகரில், திரட்சி உடையவும், விரும்புவதற்கு இடமானதும் ஆன தனங்களை உடைய பூங்கொடி போன்ற உமாதேவியோடும் இன்பமயமாக எழுந்தருளியிருக்கவும், மக்கள் பொருமி கொடிய துன்பங்களை நுகர்வது என்ன அறிவோ ?

ஆளுடை நாயகன் என்றதால் உயிர்கள் அடிமையும் இறைவன் ஆண்டானுமாதல் பெறப்படும். அடிமையைக் காத்தல் ஆண்டான் கடமை ஆதலால், ஆண்டான் இருக்க அடிமை துயருழக்க ஏதுவின்று. மேலும் அந்த ஆண்டான் அருளோடு கூடியிருப்பவன். அன்றியும் எவரும் அஞ்சிப் பின்வாங்காது துணிந்து நெருங்க குறையிரக்க ஏற்ற இனிய தோற்றமுடன் அமர்ந்திருப்பவன். அவ்வாறு அவனை அணுகித் தம் துயரை அவன் அருளால் போக்கிக் கொள்ளாத மனிதர் பெரும் பேதையரே ஆவார் என்பார். நாயகன் கொடியொடுமினிது வீற்றிருக்கத் துயருழப்ப தென்விரகே என்றார்.

*கொம்மை-திரட்சி, வெம்-விருப்பத்திற்கு இடமாகிய, வெம்மை-விரும்புதலாகிய பண்பை உணர்த்தும் ஓர் உரிச்சொல், வெம்மை வேண்டல் என்பது தொல்காப்பியம். வெம்மை வெப்பத்தை உணர்த்துதல் வழக்கு. விம்முதல் - பொருமுதல், விரகு-அறிவு, உடைய என்னும் குறிப்புப் பெயரெச்சம் ஈறு தொக்கு உடை என நின்றது. உழத்தல், வருந்தலுமாம் ஆகையால் கொடிய துன்பங்களில் வருந்துதல் எனினுமாம். எவன் என்னும் வினாவினைக் குறிப்பு முற்று.*

விரகி னாற்சிலர் செய்திடும்
வினைகளும் உண்டோ ?
மருவி அம்பாம் மறைந்துநின்
றாட்டுவான் போல
உரக கங்கணக் கருவையான்
ஒருவன்நின் றாட்டப்
பரவை சூழ்நில மன்பதைப்
பரப்பெலாம் நடிக்கும். 83

*பொருள்:* திரைச் சீலையினால் மறைவுபட்டு பொருந்தியிருந்து ஆடச்செய்யும் பொம்மலாட்டி போல, அரவினைக் கைவளையாக அணிந்த திருக்கருவைச் சிவபெருமான் ஒருவன் நின்று ஆடச் செய்ய, கடல் சூழ்ந்த உலகத்தில் உள்ள மக்கள் கூட்டம் எல்லாம் ஆடா நிற்கும். சிலர் தம் வயத்தராய்த் தத்தம் அறிவினால் செய்யும் தொழில்களும் உண்டோ? இறைவன் இயக்கினால் அன்றி உயிர்கள் இயங்காது.

இறைவன் உயிர்களைப் பாவை போல ஆட்டுவது கன்மக் கயிற்றின் வழியே என்பதும் இங்கு பெறப்பட்டது. திரையினை நீக்கிப் பார்ப்பவர்க்குப் பொம்மலாட்டி புலப்படுவது போல மாயையாகிய திரையை நீக்கிக் காண வல்லார்க்கு இறைவனும் புலப்படுவான்.

*மருவி - பொருந்தி, அம்பரம் - சீலை, பரவெளி, உரகம் - பாம்பு, கங்கணம் - வளையல், பரவை - கடல், மன்பதை என்பதே மக்கட் பரப்பை உணர்த்தும் ஆயினும், மிகுதி உணர்த்த மன்பதைப் பரப்பு என்றார்.*

நடித்த தாள்களும் நகைமணி
முறுவலும் முகமும்
பொடித்த வேர்வெழும் புருவமும்
அருள்விலோ சனமும்

முடித்த தண்பிறை வேணியும்
முகலிங்கண் மழுமான்
பிடித்த செங்கையும் காண்பவர்
புவியிடைப் பிறவார். 84

*பொருள்:* முகலிங்கப் பெருமானுடைய திரு நடனம் செய்த திருவடிகளையும், விளங்குகின்ற அழகிய புன்னகையையும், வியர்வை அரும்பும் திருமுகத்தையும், மேலேறும் திருப்புருவங்களையும், அருள் கனியும் திருக்கண்களையும், குளிர்ந்த இளம் சந்திரனைச் சூடிய சடாபாரத்தையும், மழுவையும், மானையும் ஏந்திய செவ்விய திருக்கரங்களையும் தரிசிப்பவர் இந்நில வுலகத்தில் பிறவார்.

வேர்வு பொடித்த முகமும் எனவும், தண்பிறை முடித்த வேணி என்றும் இயைத்துப் பொருள் கொள்க. முகமும் பொடித்த வேர்வெழும் புருவமும் என்னும் சொற்றொடர்க்கு ஆற்றொழுக்காகப் பொருள் கொண்டு திருமுகம் அரும்பிய வியர்வை எழும் திருப்புருவங்களும் என்று உரை கூறுவோரும் உண்டு. முகத்தில் வியர்வை அரும்பியது என்பதன்றிப் புருவத்தில் வியர்வரும்பியது என்பது மரபு ஆகாததாலும் கூறும் உறுப்பு ஒவ்வொன்றி னுக்கும் அடை கொடுத்துக் கூறிய ஆசிரியர் உறுப்புகளில் சிறந்த முகத்திற்கு அடை கொடாது செல்லாராதலானும், திருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் என வரும் திருக்கோவையாரில் சிறந்த உறுப்புக்கு உவமையாதல் பற்றி கோங்கு அடைபெறாது நின்றார் போல இங்கும் கொள்ளலாம். ஆயினும் அவ்வாறு கொண்ட விடத்து எழும் என்னும் பெயரெச்சவினை புருவத்திற்கு உரியதாகாது வியர்வைக்கு உரியதாகி நடிக்குங்காலைப் புருவத்தில் நிகழுதற்குரிய மெய்ப்பாட்டைக் காட்டாது பொருட்சிறப்பை அழிக்கும் ஆதலாலும் மேற்கூறியதே உரையாகும்.

மாயா காரியமான பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை அல்லாத அருள் உருவத் திருமேனிக்கு முகம் வியர்த்தல் முதலியவற்றை ஏற்றிக் கூறுதல் சொல்லளவிலே யாகும். முகலிங்கன் தாள்களும், முறுவலும், முகமும் புருவமும், விலோசனமும், வேணியும், கையும் காண்பவர் புவியிடைப் பிறவார்.

*நகை - விளங்குதல், நகை முறுவல் - விளங்குதல் உடைய முறுவல், மணி - அழகு, முறுவல் - புன்னகை, பொடித்த - அரும்பிய, விலோசனம்-கண்.*

பிறந்த யாக்கைகள் அளப்பில
பெருங்கடற் புவிக்குள்
இறந்து போயதல் லால்அவற்
றெய்திய துண்டோ ?
கறந்த பால்நிற வண்ணனைக்
கருத்துற இருத்திச்
சிறந்த யாக்கையீ திதற்குநான்
செய்வதும் உளதோ ? 85

***பொருள்:*** பெரிய கடல் சூழ்ந்த உலகத்தில் பிறந்த உடம்புகள் அளவில்லாதனவாகும். இறந்து போனமை அல்லாமல் அவற்றுள் நான் பெற்றபேறு ஏதேனும் உண்டோ? கறந்த பாலின் நிறத்தை ஒத்த நிறமுடையவனை உள்ளத்தில் பொருத்தி உறையச் செய்து மேன்மை பெற்ற உடம்பு இதுவே, ஆதலின் இவ்வுடம்பிற்கு நான் செய்யத்தக்க கைம்மாறும் உண்டோ ?

பிறவியால் பெறத்தக்க பயன் வீடுபேறு, இப்பிறவி எடுத்தமையே கடந்த பிறவிகளால் வீடுபேற்றை எய்தியது இல்லை என்பதற்குக் கண்கூடான சான்றாகும். ஆதலின் முன் எடுத்த யாக்கைகள் இறந்து ஒழிந்தனவே அல்லாமல் அவற்றால் எய்திய பயன் யாதுமில்லை என்றார்.

பால் வண்ண நாதனை இடையறாமல் சிந்தித்து இருக்கும் அறிவு இந்த யாக்கையிலே நிகழக் கண்டதாலும், அந்த சிந்தனையே வீடுபேற்றை கொடுக்கும் என்பது ஒருதலையாயினாலும் இதுவே பயன் தந்த யாக்கை என்பார். சிறந்த யாக்கை ஈது என்றார் ஆன்மாவை வீடு பெறுவித்துத் தானழிவதே ஆதலின், இதற்கு நான் செய்வதும் உளதோ என்றார்.

*அளப்பு இல - அளவு இல்லாதன, புவி - பூமி, போயது-போனமை, அவற்று - அவற்றால், பானிற வண்ணன் - பால் வண்ணன் எனப் பொருள்பட்டு ஒரு சொல் நீர்மைப்படும். உண்போ, உளதோ என்பவற்றில் ஓகாரம் எதிர்மறைப் பொருளன.*

**உள்ள தில்லதென் றுரைத்திடும்**
**பொருளையுய்த் துணராக்**
**கள்ளர் நாவினில் இருந்திடாக்**
**களாநறுங் கனியைத்**
**தெள்ளு செந்தமிழ்க் கருவையிற்**
**சினகரம் புகுந்து**
**மெள்ள நான்சென்று காண்டலும்**
**தீர்ந்தது விடாயே. 86**

*பொருள்:* உள்ளதென்றும் இல்லதென்றும் கூறப்படும் பொருளைத் திருவருள் விளக்கத்தால் கூர்ந்து உணரமாட்டாத வஞ்சகர் நாவில் பொருந்தாத திருக்களா நீழலில் அமர்ந்த இனிய கனி போன்ற தெளிவும் செம்மையும் வாய்ந்த தமிழ்மொழி வழங்கும் திருக் கருவையில் உள்ள திருக்கோயிலுள் யான் மெல்லப் புகுந்து சென்று கண்டவுடனே வேட்கை தீர்ந்தது. கருவைத் திருக்கோயினுள் சென்று ஆண்டெழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தரிசித்த மாத்திரத்திலே பேரின்பப் பேறு பெற்றவன் ஆயினேன் என்பது கருத்து.

உள்ளது - இல்லது, உய்த்துணரல் - ஆராய்ந்தறிதல், உணரா-இருந்திடா ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ஆதலின் உணராக் கள்ளர் இருந்திடாக்கனி என வலி மிக்கது. இருந்திடா-பொருந்தாத, கனியை வாயிற் பொருந்த இடார். இட்டாலும் அது வாயிற் பொருந்தி சுவை முதலிய பயன்களை தராது எனவும், சிவபெருமான் புகழை நாவால் சொல்வார். சொல்லினும் உள்ளம் இன்புறுதல் முதலிய பயன்களைப் பெறார் எனவும் பொருள்படும். எனவே மெய்யர் அவன் புகழைப் பேசுவர். பேசிப் பல பயன்களையும் பெறுவார் என்பன அருத்தாபத்தியாற் பெறப்படும். அருந்திடா எனவும், இனித்திடா எனவும் பாடம் கொள்வாரும் உளர். தெள்ளு செந்தமிழ் தெளிந்த செவ்விய தமிழ், தெளிந்த-மாசு நீங்க.

சினகரம்-கோயில், ஜினக்ருஹம் என்பதன் சிதைவென்பர். மெள்ள-மெல்ல என்பதன் மரூஉ, விடாய்-வேட்கை, கள்ளர் நாவுறாத கனியை நான் கண்ட மாத்திரையில் வேட்கை தீர்ந்தது என்றலின் உண்டு. பயன் பெறுதல் ஒரு தலையென்பது தானே பெறப்படும். கனி என்பது இங்கு பழம் என்னும் பொருளில் இயற் சொல்லாகவும், சிவபெருமான் என்னும் பொருளில் உவமை யாகுபெயராகவும் கொள்ளக் கிடப்பது காண்க.

இறைவன் இயல்பு அவனருள் வழிநின்று அனுபவ வாயிலான் உணரப்படுவதன்றி வெறும் அறிவின் ஆற்றல் கொண்டு அறியப்படுவதன்றாகலான் உய்த்துணர உணரா என்றார். அவன் அருள்வழி நின்று இவ்வுணர்வைப் பெறாதவர்கள் பேரின்பவீடு பெற்று பிறவி நோய் தீரவொட்டாமல் தம்மைத்தாமே வஞ்சித்தலின் கள்ளர் என்றார். அவ்வஞ்சகர் ஒருகால் ஏதோ ஒரு காரணம் பற்றி இறைவன் பெயரைப் பேசினாலும், உள்ளன்பு இன்றிப் பேசப்பட்டதால் இறைவன் பெயர் அவர்கள் நாவில்

பொருந்தாது என்பார். நாவினில் இருந்திடா எனத் தன்வினை வாய்ப்பாட்டாற் கூறினார். இறைவன் வடிவாக எதைக் காணினும் உள்ளம் நெகிழும் அன்பர்க்கு பிறவி நோய் தீர்ந்து பேரின்பம் கிட்டுதல் ஒருதலை என்பார். காண்டலும் தீர்ந்தது விடாயே என்றார்.

**விடக்கை மும்மலக் குழிசியை**
**விளிந்தபின் தீண்டாத்**
**துடக்கை நோய்க்கணம் துணங்கையிட்**
**டாடுறும் அரங்கை**
**நடக்கும் சூத்திரப் பாவையை**
**நான்சுமந் துழலல்**
**கடக்கு நீக்கியென் றாளுவை**
**கருவைஉத் தமனே. 87**

*பொருள்:* திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் மேலோனே. ஊண் மயமானதும், மூன்று மலங்கள் பாண்டம் போல்வதும், உயிர் நீங்கியபின் தொடவும் தகாத அசுத்தமாவதும், பிணிக்கூட்டம் துணங்கைக் கூத்தாடுவதற்கு இடமான அரங்கம் போல்வதும், நடக்கும் சூத்திரப்பாவை போல்வதும் நான் சுமந்து வருந்தியலைதல் ஒழிய மாள்வித்து என்று ஆண்டருள் வாயோ ? விரைவில் ஆண்டருள வேண்டும் என்பது கருத்து.

மாசறத் துலக்கி அழகுற வைத்துப் போற்றப்படும் உண்கலன் உணவிட்டு உண்டபிறகு எச்சிலென்று, இழித்து ஒதுக்கப்படுதல் போல், உண்டியும் உடையும் அணியும் சாந்தும் இட்டுப் போற்றப்படும் உடல் இருவினை நுகர்ச்சிக்கு இடமாகி அவ்வினை நுகரப்

பட்ட பிறகு இழித்து ஒதுக்கப்படும் ஆதலின் விளிந்தபின் தீண்டாத் துடக்கை என்றார். இவ்வுடலை ஒழிக்கத் துணிவது பிறப்பறுத்து என்னை நீ ஆட்கொள்வாய் என்ற உறுதியாற்றான் என்பார். நீக்கி என்று ஆளுவை என்றார்

*விடக்கு – மாமிசம், குழிசி – பாண்டம், விளிதல்– காதல், துடக்கு–அசுசி, கணம்–கூட்டம், துணங்கை– ஒருவகைக் கூத்து, அரங்கு–கூத்து மேடை, நடக்கும் என்றது இங்கு பொதுவாய்த் தொழில் நிகழ்த்துவதைக் குறிக்கும். காலால் நடத்தல் ஒன்றையேயன்று நடிக்கும் என்பது பாடம். உழலல்–வருந்தல், சுழல்தல், கடத்தல்–சென்றொழிதல். முன் நின்ற ஐகாரங்கள் ஐந்தும் அழிக்கப்படு பொருளில் வந்த இரண்டாம் வேற்றுமை உருபு ஒன்று பலவடுக்காய் வந்தன. ஆளுவை என்பதில் ஐகாரம் முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி. உகரம் சாரியை, வகர வொற்று இடைநிலை.*

உத்தி வாளரா முடித்தபால்
வண்ணனே உனது
பத்தி வேண்டுவ தன்றியே
நரகிடைப் படினும்
முத்தி வேண்டிலேன் துறக்கமும்
வேண்டிலேன் முனிவர்
சித்தி வேண்டிலேன் வேண்டிலேன்
திசாதிபர் சிறப்பே. 88

*பொருள்:* படத்தில் புள்ளிகளை உடைய ஒளி பொருந்திய பாம்பினைச் சடாமுடியில் தரித்த பால் வண்ணனே, நரகில் விழுந்து வருந்தினாலும் உன்னிடத்தே பக்தி செய்திருத்தலை வேண்டுவதே அல்லாமல், நரகத் துன்பத்தினின்று வீடுபெறுதலை கருதி வீடு பேற்றினையும் விரும்பிலேன், சுவர்க்கப் பேற்றினையும் விரும்பிலேன், முனிவர்களால் எய்தப்படும் சித்திப் பேற்றையும் விரும்பிலேன், திக்குப் பாலகர்களுக்குரிய சிறப்புக் களையும் விரும்பிலேன்.

*உத்தி-பாம்பின் படத்தில் உள்ள புள்ளிகள், அரா-பாம்பு நரகிடைப்படினும் என்பதில் உம்மை எதிர்மறைப் பொருளது முத்தி, சித்தி, சிறப்பு என்பவற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கன. முத்தி-இருவினை ஒழித்து பிறப்பறுத்து சார்தற்கிடனான சிவநிலை துறக்கம்-நல்வினைப் பயன் நுகர்தற்கு இடனான சுவர்க்க பூமி, எண்வகைச் சித்தியாவன, அனிமா, மகிமா, கரிமா, இலகிமா,பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், மசித்துவம், திசாதிபர். எண்மர் - இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆவர்.*

சிறக்கத் தக்கது கருவையான்
திருவடி நேயம்
மறக்கத் தக்கது மற்றுள
சமயத்தின் மயக்கம்
துறக்கத் தக்கதுஇவ் வுடம்பையான்
என்றுறு தொடர்பு
பிறக்கத் தக்கது சிவானந்த
வாரியின் பெருக்கே. 89

*பொருள்:* திருக்கருவைச் சிவபெருமானது திருவடிக்கீழ் வைக்கும் அன்பே சிறக்கத் தகுதியானது வேறாக உள்ள மதங்களில் மயங்குதலே மறக்கத் தகுதியானது. இவ்வுடம்பை நான் என்று பற்றியிருக்கும் பற்றே விட்டொழியத் தகுதியானது, சிவானந்த வெள்ளமாகிய பெருக்கே உண்டாகத் தகுதியானது.

*தக்கது - தேற்றப் பொருள்பட்டு நிற்கும் தொழிற் பெயர் வியங்கோட் பொருட்டென்பதுமுண்டு. நேயம்- அன்பு, தொடர்பு - பற்று, வாரி-பெருக்கு-வெள்ளம்.*

பெருகு காதல்கொண் டனுதினம்
பேதைநெஞ் சடியேன்
உருகி நாடவும் வெளிப்படா
உனைஉளத் துணர்ந்தேன்

இருக ணாரவும் காண்பதற்கு
என்றெதிர்ந் திடுவாய்
கருகு கண்டனே கருவையிற்
களாநறுங் கனியே. 90

*பொருள்:* கறுத்தகண்டத்தை உடையவனே, திருக்கருவையின் கண் களாமரத்தின் கீழ் எழுந்தருளிய இனிய கனிபோல்வனே, அடியேன் மிகுந்த அன்பு கொண்டு நாள்தோறும் என் மூட மனம் உருகித் தேடவும் வெளிப்படாத உன்னை, உள்ளக்கண் கண்டு அறிந்து கொண்டேன், இரண்டு கண்களும் தெவிட்டும்படியும் தரிசிப்பதற்கு எப்பொழுது பிரசன்னமாவாயோ ?

அடியேன் பேதை நெஞ்சுருகி என இயைக்க, நாட - தேட, நாடவிட்ட படலம் என்பது காண்க. ஆர்தல்-நிறையக் கொள்ளுதல், கண்ணாரக் கண்டேன், நாவாரத் துதித்தேன், வாயார வாழ்த்தினேன், செவியாரக் கேட்டேன், வயிறார உண்டேன். மனமாரச் செய்தேன் என வரும் வழக்கு நோக்கி உணர்க. ஆரவும் என்பதில் உம்மையை இறந்தது தழீஇய எச்சவும்மையாகக் கொண்டு, அதற்கேற்ப உளத்து ஆர உணர்ந்தேன் என ஆர என்பது முன்னும் வருவித்துரைக்கப்பட்டது. ஆரவும் என்பதன் உம்மையை இரு கண்ணுமார என மாற்றிக் கோடலுமொன்று.

பதிற்றுப்பத்தான இந்நூலில் இச்செய்யுள் ஒன்பதாம் பத்தின் இறுதியாகும். சென்ற எட்டு பத்துக்களினும் இப்பத்தின் முற்பகுதியிலும் திருக்கருவைச் சிவ பெருமானது திருப்புகழையும் தமக்கு அவன் மாட்டுள்ள பக்திப் பெருக்கு ஆகியவற்றையும் பல பட விரித்துரைத்த ஆசிரியர் இப்பத்தின் தமது முடிவான நோக்கத்தை வெளியிடுகின்றார்.

அதாவது, உடற்சுமை ஒழிதல், பத்தி உடைமை, சிவபெருமானது அருந்திருக்கோலத்தைக் கண்ணாரக் காணுதல் முதலாயின. இங்ஙனம் தம் முடிவான நோக்கத்தை அறிவித்து விட்டமையால், இனி அந் நோக்கத்தை நிறைவேற்றத் திருவுளம் இரங்கும் வகையில் சிவபெருமான் திருவடித் தாமரைகளை வந்தித்து நிற்றலின்றிச் செய்யக்கடவது வேறெதுவும் இல்லை. ஆதலின், அடுத்து வரும் இறுதிப்பத்து முற்றும் வணக்கமே கூறி முடிப்பார். அருளே திருமேனியாக உடையை ஆதலால் என்மாட்டருள் கூர்ந்து யான் வேண்டிய திருக்காட்சியை நல்கி அருள்வாய் என்பது படக் கருகுகண்டனே எனவும், கனியே எனவும் விளித்தார். கருகு கண்டம் தேவர்க்கிரங்கி ஆலமுண்ட அருட் செயலையும், கனி கனிவுடைமையையும் குறித்து நிற்றலின் கனி உவமை ஆகுபெயர்.

## பத்தாம் பத்து

முதலாம் மூன்றாம், ஐந்தாம், ஏழாம் சீர்கள் மாச்சீர்களாகவும்
பிறவெல்லாம் விளச்சீர்களாகவும் வந்த
எண்சீர் ஆசிரிய விருத்தம்

கனிவு றாமணம் கனிய நின்பெரும்
கருணை தந்தவா பேற்றி நாயினேன்
இனிய பாடலாம் களவின் ஈசனென்று
ஏத்த நாத்தரும் இறைவ போற்றிவான்
பனிநி லாவுடன் கங்கை துன்றுசெம்
பவள வார்ச்சடைப் பிரம போற்றிவில்
குனிவு றாமுணம் புரம் எரித்திடக்
குருத்த வாள்நகைக் குழக பேற்றியே. 91

*பொருள்:* கனியாத மனமும் கனியும்படி நினது பேரருளைத் தந்தவனே, உன் திருவடிகளுக்கு வணக்கம், நாய் போற் கடைப்பட நான் உனக்கு இனிய பாடல் களால் திருக்களாநீழலில் எழுந்தருளிய கடவுளே, என்று துதிக்க நாத்தந்து அருளிய தலைவனே, வணக்கம். வானின்கண் உலவும் குளிர்ந்த பிறைச்சந்திரனோடு கங்கையும் சேர்ந்த பவளம் போன்ற சிவந்த நீண்ட சடையினை உடைய மேலோனே, வணக்கம். வில்லானது வளைதற்கு முன்னே முப்புரங்களைச் சுட்டெரிக்கக் கோபித்த ஒளிபொருந்திய புன்னகையைக் கொண்ட அழகனே, வணக்கம். இங்கு மேலும் வணக்கம் என்று வருந்தோறும் உன்திருவடிகட்கு வணக்கம் என இசையெச்சம் கூட்டிப் பொருள் கொள்ளவும்.

பாமாலையே உனக்கு இனியதாவது என்றறிந்து பாமாலையால் உன்னைத் துதிக்க விரும்பிய எனக்கு அவ்விருப்பத்தை நிறைவேற்றத் தக்க நாவண்மையைத் தந்தருளினை என்பார். இனிய பாடலால் ஏத்த நாத்தருமிறைவ என்றார். இவ்வாறு உனக்கு இனிய பாடல் எனக்கொண்டு பொருளுரையாவிடத்துத் தாம் பாடி ஏத்தும் பாடலைத் தாமே இனியதென இறைவனுக்குக் கூறினாராகித் தம்மைத் தாமே இடமல்லா இடத்திற் புகழ்ந்து கொள்ளும் குற்றம் ஆசிரியர்க்கு ஏறும் என்பது உணர்க.

*கனிவு உறா-கனியா என ஒரு சொல் நீர்மைப்படும்;, தந்தவா-ஈறுகெட்டு அயல் நீண்ட விளிப்பெயர். போற்றி-வணக்கம், நாயினேன்-நாய், நாய்போல் என்பது பொருள், களவில் ஈசன்-களாவின் கீழ் எழுந்தருளி உள்ள சிவபெருமான், வான்-வான்கண் உலவும், குனிவு-வளைவு, குருத்த-கோபித்த, குழகன்-அழகன், தந்தவா போற்றி முதலாயின விளித்தொடர். தந்தவாறு என்பது விகாரப்பட்டு வந்ததாகக் கொண்டு தந்த விதம் புகழப்படுவது என பொருள் உரைப்பினுமாம்.*

**குழவி வெண்ணிலா அனைய வெண்ணகைக்**
**கொடியி டத்துவாழ் குரிசில் போற்றிஎன்**
**பழைய தீவினைப் பகைதொ லைத்திடும்**
**பாவ நாசனே போற்றி காய்சினத்து**
**உழுவை யின்வரி தோல சைத்தபட்டு**
**உடைம ருங்கினோய் போற்றி செந்தமிழ்க்**
**கழும லப்பதிக் கவுணி யன்புகழ்**
**களவின் நீழலிற் கடவுள் போற்றியே. 92**

***பொருள்:*** *இளமையான வெள்ளிய சந்திரனைப் போன்ற ஒளிபொருந்திய புன்சிரிப்பினை உடைய பூங்கொடியனைய உமாதேவி இடப்பாகத்தில் வாழும் இறைவனே, வணக்கம். தொன்று தொட்டுள்ள எனது தீவினையாகிய பகையைப் போக்கியருளும் பாவநாசனே, வணக்கம். வருத்தும் கோபத்தை உடைய புலியின் கோடமைந்த தோலைப் பட்டு உடையாகக் கட்டிய இடையை உடையவனே, வணக்கம். செந்தமிழ் சீகாழிப் பதியில் திருஅவதாரம் செய்த கௌணிய கோத்திரத் தரான திருஞானசம்பந்தர் புகழ்ந்து பாடிய திருக்களா நீழலமர் கடவுளே, வணக்கம்.*

*குழவி-இளமையுடையது, இளமை குறிக்கும் குழவென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயர். மழவும் குழவும் இளமைப் பொருள் என்பது தொல்காப்பியம். வெண்ணகை என்பதில் வெண்மை ஒளியுணர்த்தி நின்றது. இடத்து இடப்பாகத்தின் கண், குரிசில்-ஆண்பாற் பெயர். வினைப்பகை-பண்புத்தொகை, பாவநாசன்-பாவத்தை நாசம் செய்பவன், காய்தல்-அழித்தல், உழுவை-புலி, வரி-கோடு, தோல் அசைத்த பட்டுடை மருங்கு தோல்பட்டு உடை அசைத்த மருங்கு என அழைக்க. மருங்கினோய்யடியாகப் பிறந்த பெயர்.*

செந்தமிழ் என்பதைக் கௌணியனுக்கு அடையாக்கவும். கழுமலத்திற்கு அடையாக்கினுமாம். கழுமலம் என்பது சீகாழிக்குரிய பன்னிரு திருப்பெயர்களுள் ஒன்று. கௌணியன் குடிப்பெயர்.

பிரமபுரம், வேணுபுரம், பெரும்புகலி, வெங்குருநீர்ப்
பொருவில் திருத் தோணிபுரம், பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவம் சண்பைநகர் வளர்காழி கொச்சை வையம்

இவை சீகாழிக்குரிய பெயர்கள்.

திருஞான சம்பந்தர் அருளிய தேவாரம், ஆதி சங்கராச்சாரியார் இயற்றிய சௌந்தர்யலகரி போன்ற நூல்களை முன் அடையாகக் கொண்டு செந்தமிழ் என்பதனைக் கழுமலத்திற்கு அடையாக்கினார்.

கடையு கத்தினிற் பொழில்கள் ஏழையும்
கனல்கொ ளுத்திய சுடலை யம்பலத்து
அடலை பூசிஎன் அம்மை காணநின்று
ஆடும் ஐயனே போற்றி போற்றிநெஞ்சு
இடைவி டாமல்உன் சரண பங்கயத்து
இருக்க நல்கிய இறைவ போற்றிமால்
விடையின் மேவியே கருவை மாநகர்
வீதி வாய்வரும் விமல போற்றியே. 93

***பொருள்:*** யுகங்கள் முடியும் காலத்தில் ஏழு உலகங்களையும் நெருப்பாய் நின்று எரித்து அருளியதால் உண்டாகிய சுடுகாடாகிய பொது இடத்தின்கண் சாம்பலைப் பூசிக்கொண்டு என் அன்னை காணும்படி நின்று திருக்கூத்தாடியருளும் ஐயனே, வணக்கம். என் உள்ளம் உன் திருவடித்தாமரையின்கண் இடையறாது

பதிந்து இருக்க அருள் செய்த தலைவனே, வணக்கம். பெரிய இடப வாகனத்தின் மீது ஆரோகணித்துத் திருக்கருவை என்னும் சிறந்த நகரின் வீதியின் கண்ணே எழுந்தருளி வரும் குற்றமற்றவனே, வணக்கம்.

சர்வசங்காரகாலத்தில் சிவபெருமான் கொள்ளும் திருவுருவம் அனற்பிழம்பாதலால் கனல் பொருந்திய என்றார். உலகம் ஏழினையும் என்பதை மேல் உலகம் ஏழினையும், கீழ் உலகம் ஏழினையும் எனக்கொள்க. அம்பலமாவது பொது இடம். போற்றி போற்றி என்பது உவகை பற்றி வந்த அடுக்கு, யாவும் அழிந்த காலத்தில் இறைவன் திருநடனத்தைக் காண்பவர் உமாதேவியே ஆதலால் அம்மைகாண என்றார்.

கடையுகம் - யுகக்கடை, இலக்கணப் போலி, பொழில் - பூமி, புவியும் சோலையும் பெருமையும் பொழிலே என்கிறது பிங்கலம். ஏழையும் என முற்றும்மை கொடுத்தார் இணைத்தென்றறி பொருள் ஆதலின், கொளுத்துதல்-பற்றுவித்தல், அறிவு கொளுத்தினான், கூரை கொளுத்தினான் என்பது வழக்கு. கொளுத்திய சுடலை- எரித்த காரணத்தால் உண்டான காரியமான சுடலை எனப்பொருள்படுதலின் கொளுத்திய என்பது காரணப் பொருட்டாய் நின்ற இறந்தகாலப் பெய ரெச்சமாம். கொளுத்திய சுடலை எனப் பாடங்கொள் வாரும் உண்டு. எரித்து அந்தச் சுடலை எனப் பொருள் கொள்வர். அடலை - சாம்பல்.

**விமல போற்றி நின்பெருமை நாரணன்**
**விரிஞ்சன் ஆதியோர் அறிய கிற்றிலா**
**அமல போற்றிநான் அறியும் வண்ணம்முன்**
**அறிவு தந்தருள் அறிவ போற்றிதண்**

கமல வாவிசூழ் கருவை மாநகர்க்
களவின் நீழல்வாழ் காலகாலனே
இமய மால்வரைக் குமரி ஒப்பனைக்கு
இனிய காதல போற்றி எந்தையே. 94

*பொருள்:* குற்றமற்றவனே,வணக்கம். திருமால் நான்முகன் முதலிய தேவர்களும் உன்னை அறிய மாட்டாத பெருமை உடைய மலரகிதனே, வணக்கம். உன்னை நான் அறிந்து வழிபடும் வண்ணம் முன்னதாக எனக்கு அறிவு தந்தருளிய ஞான சொரூபனே, வணக்கம். குளிர்ந்த தாமரைத் தடங்கள் சூழ்ந்த திருக்கருவை யென்னும் சிறந்த நகரத்தின் கண்ணே களாமரத்தின் நிழலில் எழுந்தருளி இருக்கின்ற காலகாலனே, இமயம் என்னும் பெரிய மலையரசன் பெற்ற புதல்வியான ஒப்பனை அம்மைக்கு இனிமை தரும் அன்பனே. என் தந்தையனையானே, வணக்கம்.

இறைவனின் திருவுருவம் சத், சித், ஆனந்தம் என்று மூன்றென்பர். இவற்றுள் சித் என்பது அறிவு ஆதலால், அவ்வடிவைக் குறிப்பிட்டு அறிவ என விளித்தார். அவனை வணங்குவதற்கும் அவனருள் வேண்டுதலின், உன்னை அறியும் அறிவை உன்னை அறியும் முன் நீயே கொடுத்து அருளினாய் என்பார். முன்னறிவு தந்த ருளறிவ என்றார். இமயம் என்னும் பர்வதராஜன் புதல்வி பார்வதி ஆகையால் இமயமால்வரைக் குமரி என்றார்.

நாரணன் விரிஞ்சன் ஆகியோரின் நின் அறிய கிற்றிலாப் பெருமை அமல என இயைக்க, விரிஞ்சன்-பிரமன் அறியகிற்றிலா-ஈறு கெட்ட எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம். கில்-ஆற்றல் உணர்த்தும் விகுதி. அனைத்தும் ஒரு பகுதியாய் அறியகில் என நின்று துகரச் சாரியையும் இல் என்னும் எதிர்மறை விகுதியும்,

ஆகாரச்சாரியையும் கூடி அறியகிற்றிலா என்றாயிற்று. காலகாலன்- யமனுக்கு யமன் ஆனவன், கூற்றை உதைத்தமையால் சிவபெருமானுக்கு இப்பெயர் வழங்கலாயிற்று. மால் வரை-பெரிய மலை, எந்தை-என் தந்தை என்பதன் மரூஉ.

**எந்தை யாயினாய் குரவன் ஆயினாய்**
**இறைவன் ஆயினாய் போற்றி என்மனப்**
**பந்தம் ஆயினாய் வீடும் ஆயினாய்**
**பரமும் ஆயினாய் போற்றி தென்புலச்**
**சந்த மால்வரைத் தமிழ்மு னிக்குஉமை**
**தனைம ணந்தமெய்க் கோலம் காட்டினாய்**
**சுந்த ரப்புயத் தழகு போற்றிநற்**
**சோதி பால்வணத் தாதி போற்றியே. 95**

*பொருள்:* எனக்குத் தந்தை ஆனவனே, ஆசிரியன் ஆனவனே, தலைவன் ஆனவனே, வணக்கம். என் மனத்திற்குப் பற்றுக்கோடானவனே, முத்தியும் ஆனவனே, மேலோனும் ஆனவனே, வணக்கம். தென்திசையில் உள்ள சந்தனமரம் பெரியமலையில் அமர்ந்த தமிழ் முனிவராகிய அகத்தியருக்கு, உமாதேவியைத் திருமணம் செய்தருளிய உன் உண்மைத் திருக்கோலத்தைக் காட்டி அருளியவனே, உன் திருப்புயங்களின் அழகு புகழப்படுவதாக, நல்ல சோதியே, பால் வண்ணனான முதல்வனே, வணக்கம்.

குரவன்-ஆசிரியன், அரசன் உபாத்தியான் தாய் தந்தை தம்முன் இவ்வைவரும் ஐங்குரவர் எனப்படுவர். குரவராவார் வழிபாடு செய்யத்தக்க பெரியோராவர். இச்சொல் ஆண்பால் ஈற்றதாய் வருமிடத்து ஆசிரியனையும், பலர்பால் ஈற்றதாய் வருமிடத்து தாய் தந்தையரையும் குறித்தல் பெருன்பான்மையான வழக்காகும். குரவனை வணங்கக் கூசி நின்றோனும் குரவர்தம் இயைந்து கொடுத்திலராயின் என்பன

எடுத்துக்காட்டு பந்தம்-பற்று, வீடு-முத்தி, பரம்-மேலானது பற்றாயதன்றி அப்பற்றுக்கு மறுதலையுமாகினாய். பந்தமும் வீடுமாயதன்றி அவற்றிற்கு மேற்பட்டோனு மாயினாய் எனப் பொருள் தருவதால் உம்மைகள் இரண்டும் இறந்தது தழீஇய எச்சவும்மை. சிவபெருமான் பந்தம் வீடு என்னும் இரண்டிற்கும் மேலானவன். தமிழ் மொழிக்கு ஆதி இலக்கணம் செய்தவர் ஆதலால் அகத்தியர் தமிழ்மொழி எனப்பட்டார். அழகு போற்றி என்பதில் போற்றி என்பதை வியங்கோளாகக் கொண்டு பொருள் கூறுக. இங்கு போற்றுதல் புகழ்தல் அழகு போற்றி என்றும் பாடம் கொள்வார்.

**ஆதி நின்திருத் தொண்டு காதலித்து**
**அறிவு சென்றமட் டாக நின்புகழ்**
**ஓது செய்யுளிற் குறையு ரைத்திங்கு**
**ஒன்றும் நின்செவிக்கு உற்ற தில்லையோ?**
**காதல் நண்புடைக் கவிஞன் ஏவலும்**
**கங்கு லிற்கழற் கால்சி வப்புறத்**
**தூது சென்றவா போற்றி நாடொறும்**
**தொழும வர்க்கருள் கருவை ஐயனே. 96**

***பொருள்:*** உன்னை நாள்தோறும் வணங்குகின்றவர் களுக்குத் திருவருள் செய்யும் திருக்கருவைக் கடவுளே, ஆசைத் தோழமை பாராட்டிய பாவலர் ஏவிய உடனே வீரக்கண்டை அணிந்த நின் திருவடிகள் சிவக்க இராப் போதில் தூது சென்றவனே, வணக்கம். உன் திருவடித் தொண்டினை விரும்பி, அத்தகு விருப்பம் எழுந்த நாள் முதலாக இன்று வரையும் என்னுடைய அறிவு சென்ற அளவாக உன்னுடைய புகழைப் பாடிய பாக்களில் குறைகளையும் உரைத்ததில் ஒன்றேனும் நின் செவிக்கு எட்டியதில்லையோ? எட்டியிருந்தால் என் குறைகள் தீர்ந்து இருக்கும் என்பது கருத்து.

குறைகளாவது, உடல் சுமையைச் சுமந்து உழலுதல், சிவபெருமானை இருகண்களால் காணப்பெறாமை முதலியன. நின் திருத்தொண்டு காதலித்த ஆதி என்க. ஆதி என்பதை விளியாக்கினும் அமையுமேனும் மேற் செய்யுளின் இறுதியில் அவ்விளி பெறக் கிடந்தமையின் ஈண்டும் கோடல் சிறப்பன்று. செய்யுள்-தொழிலாகு பெயர். காதல் நண்பு-ஆசையோடு கூடிய தோழமை.

சிற்றறிவுடைய உயிர்களால் அறியப்படாத பெரும் புகழுடையன் ஆதலால், அன்பின் வழிபட்டு என் சிற்றறிவுக்கு எட்டிய அளவாக உன் புகழைப் பாடினேன் என்பார். காதலித்தறிவு சென்றமாட்டாக நின்புகழ் ஓது செய்யுள் என்றார். உன் புகழைப் பாடுதல் அல்லால் என் குறைகளைக் கூறுதல் காரணமாகப் பாடிலேன். ஆயினும் துன்ப உணர்ச்சியின் மிகுதியால் என்னையும் அறியாமல் என் குறைகள் உன் புகழோடு விரவி வெளிப்பட்டன என்பார். நின்புகழ் ஓது செய்யுளிற் குறை யுரைத்தது என்றார். குறையிரந்தும் வேண்டத்தகாத ஒரு கருமத்தை, ஏவி வேண்டிய ஒரு கவிஞனுக்கு இசைந்து நீ அவன் ஏவல் வழி நின்று அக்கருமத்தை முடிக்க நின் திருப்பாதம் சிவக்க நடந்தருளினாய். அப்படித் தகாத ஒன்றையும் நான் வேண்டிலேன். என் குறை முடித்தற்கு உன் பெருமைக் கேளாத எதுவும் செய்யவேண்டாம். இருந்தும் நான் தீர்க்க வேண்டிய குறைகளில் ஒன்றையும் நீ தீர்த்த பாடில்லை. யான் வேண்டுவது உன் செவிக்கு எட்ட வில்லையோ? ஓது செய்யுளிற் குறையுரைத்ததொன்றும் நின் செவிக்குற்ற தில்லையோ என்றார்.

**ஐய னேசரண் போற்றி என்னையாள்**<br>
**அப்ப னேசரண் போற்றி பொய்யிலா**<br>
**மெய்ய னேசரண் போற்றி வானவர்**<br>
**வேந்த னேசரண் போற்றி மால்மழுக்**

கைய னேசரண் போற்றி காலனைக்
காய்ந்த வாசரண் போற்றி தீநிறச்
செய்ய னேசரண் போற்றி காமனைச்
செற்ற வாசரண் போற்றி தேவனே. 97

*பொருள்:* தேவனே, கடவுளே, உன் திருவடிக்கு வணக்கம். என்னை ஆண்டருளும் அப்பனே. உன் திருவடிக்கு வணக்கம். பொய்மை அற்ற சத்தா யுள்ளவனே. உன் திருவடிக்கு வணக்கம் தேவர்களுக்கு இறைவனே, உன் திருவடிக்கு வணக்கம். மானையும், மழுவினையும் ஏந்திய திருக்கரங்களை உடையவனே, உன் திருவடிக்கு வணக்கம். இயமனைக் கோபித்தவனே, உன் திருவடிக்கு வணக்கம். தழல் போல சிவந்த மேனியனே உன் திருவடிக்கு வணக்கம். காமனை அழித்தவனே, உன் திருவடிக்கு வணக்கம்.

தேவ னேபிறர்க் கடிமை யுற்றிலேன்
சிந்தை நின்வசம் தந்த தன்றியும்
நாவி னால்தினம் பரவி வாழ்த்துவேன்
நாளும் என்குறை தீர்ப்ப தார்கொலோ?
காவல் மூவரண் கனல் கொளுத்திடக்
கருணை செய்திடும் கடவுள் போற்றியான்
பாவ காரியே எனினும் என்னைநீ
பாது காப்பதுன் பண்ப தாகுமே. 98

*பொருள்:* காவல் பொருந்திய மூன்று புரங்களை நெருப்புப் பற்றும்படி திருவருள் புரிந்த கடவுளே, வணக்கம். வேதனே, பிறருக்கு அடிமைப்பட்டில்லேன். உள்ளத்தை உன்பாலே ஒப்புவித்ததுடன், நாவினால் நாள்தோறும் துதித்து வாழ்த்துகின்றேன். ஒவ்வொரு நாளும் எனக்கு உண்டாகும் குறைகளை நீக்கி என்னை

ஆதரிப்பவர் வேறு எவர் உளர்? யான் தீவினையேன் ஆனாலும் நீ என்னை ஆதரிப்பது உன் குணத்திற்கு இயைந்ததே யாகும்.

பிறர்க்கடிமை யுற்றிலேன் என்றதால் உனக்கடிய னாயினேன் என்றார். எனவே உடம்பால் உனக்குத் தொண்டு செய்வேன் என்றாராம். சிந்தை நின்வசம் தந்ததன்றியும் நாவினால் தினம் பரவி வாழ்த்துவேன் என்றதால் மன மொழிகளால் வழிபடுதல் கூறினாராம். ஆகவே மனம் மொழி மெய்களால் செய்யக்கூடிய மூவகை வழிபாடுகளும் பெறப்பெற்றது. பிறர்க்கடிமை யுற்றிலேன் என்றது பிற தெய்வங்களை வழிபடாமையைக் குறிக்கும். உள்ளேன் பிற தெய்வம் உன்னையல்லால் எங்கள் உத்தமனே என்றார் பிறரும்.

**பண்ப யிற்றிவண் டாடு கொன்றையம்**
**படலை மார்பனே போற்றி அம்பிகை**
**கண்க ளிடத் தில்லை மனிறினிற்**
**கடிந டம்புரி கடவுள் போற்றிபூஞ்**
**சண்ப கச்செழுங் காவின் வேரிசூழ்**
**தண்க ளாவனத் தடிகள் போற்றிமீ**
**விண்ப ரிப்பவன் தொழுத நம்பனே**
**வெள்ளை மேனியாய் போற்றி**
**போற்றியே. 99**

***பொருள்:*** இசை பாடிக்கொண்டு வண்டுகள் சூழ்ந்து பறக்கும் அழகிய கொன்றை மாலையினை அணிந்த திருமார்பனே, வணக்கம். உமாதேவியார் கண்டு களிக்கும்படி தில்லைப் பொதுவில் சிறந்த நடனஞ் செய்து அருளுகின்ற ஐயனே, வணக்கம். அழகிய செண்பக மரங்கள் நிறைந்த வளமுடைய சோலையிலிருந்து வரும்

வாசம் சூழ்ந்து விளங்கும் குளிர்ந்த களாவனத்தில் எழுந்தருளிய அடிகளே, வணக்கம். விண்ணுலகத்தைக் காக்கும் இந்திரன் வணங்கிய நம்பனே, வெண் மேனியனே, வணக்கம். வணக்கம்.

*அம் - அழகு, சாரியை எனலுமாம், படலை-மார்பில் அணியும் மாலை, மன்று-பொதுவிடம், கடி - சிறப்பு, கா-சோலை, வேரி-வாசனை, மீ-மேல், பரிப்பவன்-காப்பவன், நம்பன்-நம்பி அடைதற்கு இடமானவன்.*

வெள்ளை மேனியாய் போற்றி ஒப்பனை
மேவு மார்பனே போற்றி போற்றிபூங்
கள்ள லம்புதன் களவின் நீழலிற்
கருணை யங்கடற் கடவுள் போற்றிநான்
உள்ளம் ஒன்றிநின்று அடிவ முத்திட
உதவி செய்தவா போற்றி இன்புறத்
தெள்ளு செந்தமிழ்க் கருவை மாநகர்ச்
செல்வ போற்றுநின் சீர்கள் போற்றியே. 100

*பொருள்:* வெள்ளிய திருமேனியனே வணக்கம். ஒப்பனை அம்மை விரும்பிச் சேர்ந்த திருமார்பனே வணக்கம். வணக்கம். தேன் ததும்பும் மலர்களை உடைய குளிர்ந்த களா மரத்தின் நிழலில் எழுந்தருளிய அருட் கடலான ஐயனே, வணக்கம். நான் மனம் பொருந்தி நிலைத்து உன் திருவடிகளைத் துதிக்க அருள் செய்தவனே, வணக்கம். இன்பம் உண்டாகும்படி செவ்விய தமிழ் வழங்கும் திருக்கருவை என்னும் சிறந்த நகரில் கோயில் கொண்டருளிய ஐசுவர்யனே, வணக்கம். அளவிட முடியாத உன்னுடைய நலங்கள் என்றும் புகழப் படுவனவாக.

உள்ளம் ஒன்றி நின்று அடி வழுத்திட உதவி செய்தவா என்றது. பொதுவகையால் சிவபெருமானைத்

துதிக்க உணவளித்த திருவருளைக் குறித்தலோடு சிறப்பு வகையால், சிவபெருமானைத் துதிக்க என்றெடுத்த இந்நூல் இனிது முடியச் செய்த திருவருளையும் குறிக்கும். தெளிவும் செவ்வியும் இன்புறுவதற்கு ஏதுவாதலால், இன்புறத் தெள்ளு செந்தமிழ் என்றார்.

***மேவுதல் - விரும்புதல், அலம்புதல் - ததும்புதல், ஒன்றி - பொருந்தி, நின்று - நிலைத்து, வழுத்தல் - துதித்தல், உதவி - அருள், நாவலர் தெள்ளு செந்தமிழ் என்பதும் பாடம்.***

உன் புகழைப் பாடத்தொடங்கி முடித்தேனாயினும் உன் புகழ் இதனோடு முடிந்ததில்லை. பலவாகி அளவிறந்த உன் புகழ்ச் சொற்கள் என்றென்றும் புகழப்படுவனவாக என்று கூறுவதன்றி நான் உன் புகழை முற்ற முடிய உரைக்குமாறறியேன் என்பார். நின் சீர்கள் போற்றியே என்று முடித்தார். அந்தாதி ஆதலால் சீர் என இறுதியும் முதலும் மண்டலித்து முடிந்தது.



## செய்யுட்களின் முதற்குறிப்பகராதி


| வ.எண். | செய்யுள் | பக்க எண். | பாடல் எண் |
|---|---|---|---|
| 1. | அடியார் இழைத்த | 55 | 55 |
| 2. | அண்ட கோளமும் | 76 | 80 |
| 3. | அதிசயம் உளத்தில் | 67 | 69 |
| 4. | அமரர் மாதவர் | 27 | 24 |
| 5. | அழிவிலாப்பொருளே | 16 | 13 |
| 6. | ஆடு மட்கலத் | 72 | 75 |
| 7. | ஆண்டகுரவன் | 10 | 7 |
| 8. | ஆதவன் மதிபார் | 23 | 20 |
| 9. | ஆநிநின் திரு. | 95 | 96 |
| 10. | ஆறாக்காமக் கொடி | 4 | 2 |
| 11. | இசையும் | 70 | 71 |
| 12. | இன்மை இன்பமும் | 77 | 82 |
| 13. | இருக்கினும் நிற்கும் | 61 | 62 |
| 14. | இறைவன் எங்கணும் | 38 | 36 |
| 15. | ஈசனே இடத்திமய | 73 | 76 |
| 16. | உடையர் என்று | 29 | 26 |
| 17. | உணராத நின்னிலையை | 43 | 42 |
| 18. | உண்டென மறைகள் | 64 | 65 |
| 19. | உத்தி வாளரா | 85 | 88 |
| 20. | உய்ய வோருறுதி | 67 | 68 |
| 21. | உரகாபரண | 12 | 9 |
| 22. | உருவாகி நிற்றி | 51 | 52 |
| 23. | உள்ள தில்லதென் | 82 | 86 |
| 24. | உறைவாய் நன்மணத் | 49 | 50 |
| 25. | உன்நாமம் ஓதி | 57 | 58 |
| 26. | உன்பதமேத்தி | 18 | 14 |
| 27. | எந்தை ஆயினாய் | 94 | 95 |
| 28. | எய்தி என்செயும் | 74 | 78 |
| 29. | எவ்வமுற்ற திரிமலம் | 34 | 32 |
| 30. | எவன் உயிருக்குயிராய் | 19 | 16 |
| 31. | எளியன் புன்தொழில் | 26 | 23 |
| 32. | என்கண்ணணிடத்தின் | 56 | 56 |
| 33. | என்னை ஆள்பவன் | 38 | 35 |

| வ.எண். | செய்யுள் | பக்க எண். | பாடல் எண். |
|---|---|---|---|
| 34. | ஐயனே சரண்போற்றி | 96 | 97 |
| 35. | ஒளிமதி முடித்தவேணி | 60 | 61 |
| 36. | கடவாரணத்தின் | 58 | 59 |
| 37. | கடையுகத்தினில் | 91 | 93 |
| 38. | கண்டகண்கள் | 11 | 8 |
| 39. | கருவையம்பரன் | 28 | 25 |
| 40. | கனிவுறா மனம் | 88 | 91 |
| 41. | காதலுற்றிட | 24 | 21 |
| 42. | காதற் பெருக்கும் | 50 | 51 |
| 43. | காரணம் ஏதென்று | 21 | 17 |
| 44. | கிடைத்த பொருள் | 42 | 41 |
| 45. | குழவி வெண்ணிலா | 90 | 92 |
| 46. | கூட்டமிட்ட | 36 | 33 |
| 47. | கோமானே கருவை | 45 | 44 |
| 48. | கோயில் சூழவும் | 71 | 73 |
| 49. | சிந்தனை உனக்கு | 62 | 63 |
| 50. | சிறக்கத்தக்கது | 86 | 89 |
| 51. | சீரார்கமலச் சேவடி | 2 | 1 |
| 52. | சுடரே வலிய | 5 | 3 |
| 53. | செல்வம் ஈயும் | 40 | 39 |
| 54. | தலைகொள் வெண்தலை | 37 | 34 |
| 55. | தவமும் தவத்தின் | 57 | 57 |
| 56. | தானென உருவம் | 65 | 66 |
| 57. | தானை எண்திசை | 32 | 30 |
| 58. | துளங்கு நெஞ்சமே | 77 | 81 |
| 59. | தேவேனே நின்னை | 63 | 64 |
| 60. | தேவனே பிறர்க்கடிமை | 97 | 98 |
| 61. | தொண்டு செய்து | 46 | 45 |
| 62. | தோன்றிய போது | 48 | 48 |
| 63. | நடித்த தாள்களும் | 79 | 84 |
| 64. | நடித்தேன் பொய் | 7 | 5 |
| 65. | நண்ணரும் தவங்கள் | 66 | 67 |
| 66. | நம்பி உனதருள் | 47 | 47 |
| 67. | நாதனே கவிஞன் | 68 | 70 |
| 68. | நாயகன் முகுந்தன் | 14 | 11 |

| வ.எண். | செய்யுள் | பக்க எண். | பாடல் எண். |
|---|---|---|---|
| 69. | நின்ற நிலையும் | 13 | 10 |
| 70. | நேர்ந்த நெஞ்சமே | 72 | 74 |
| 71. | படியளந்தவன் | 70 | 72 |
| 72. | பண்பயிற்றிவண் | 98 | 99 |
| 73. | பரம் எனக்குனை | 40 | 38 |
| 74. | பழமையாம் வாதனை | 44 | 43 |
| 75. | பாசம் நீக்கி | 75 | 79 |
| 76. | பாடினேன் புகழ் | 36 | 32 |
| 77. | பிறந்த யாக்கைகள் | 81 | 85 |
| 78. | பிறவி மாயவும் | 73 | 77 |
| 79. | பெருகு காதல் | 86 | 90 |
| 80. | பெருமை சான்ற | 32 | 29 |
| 81. | பெறுவது நினது | 22 | 19 |
| 82. | பொருள் வேட்டும் | 49 | 49 |
| 83. | மனத்தை யான் | 30 | 27 |
| 84. | மாயவல்லிருள் | 39 | 37 |
| 85. | முடிகடந்தது | 25 | 22 |
| 86. | முத்திக்கு வித்து | 54 | 54 |
| 87. | முன்னைப் பிறவி | 9 | 6 |
| 88. | மொழிகின்ற ஆறு | 52 | 53 |
| 89. | வணங்கெனத்தலை | 31 | 28 |
| 90. | வரையா தியற்றி | 59 | 60 |
| 91. | வழுத்திடுவேன் | 46 | 46 |
| 92. | வாழ்வை நம்பி | 41 | 40 |
| 93. | வான்ளரி அறல் | 18 | 15 |
| 94. | விடக்கை மும்மல | 84 | 87 |
| 95. | விண்ணவர் மகுட | 21 | 18 |
| 96. | விமல போற்றி | 92 | 94 |
| 97. | விரகினாற் சிலர் | 79 | 83 |
| 98. | வெள்ளை மேனியாய் | 99 | 100 |
| 99. | வேண்டுவதொன்று | 15 | 12 |
| 100. | வேனிற் சிலைவேள் | 6 | 4 |


— — — —

